## "TO US ALL TOWNS ARE ONE, ALL MEN OUR KIN."

*Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

'HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம் தத்ஸத்.] [God is Love : Knowledge is Power : *Aum*

"**New Series**" ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.** "**Approved**"

புத்தகம். **24.**] நள௵ ஆனி௴, **1916**௵ ஜூன்௴ [சஞ்சிகை **3.**


## "WISDOM'S WORD LIKE NECTAR SAVES."

*(SENT BY THE LATE Dr. G. U. POPE AS A NEW YEAR'S GREETING TO THE VIVEKA CHINTAMANI.)*

### "மூத்தோர்சொல் வார்த்தை அமிர்தம்."

"TO US ALL TOWNS ARE ONE, ALL MEN OUR KIN."

### * ஞானிகள்.

யாதும் ஊரே;—யாவருங் கேளிர்;—
தீது' நன்றும் பிறர்தர வாரா;—
நோதலுந் தணிதலும் அவற்றோர் அன்ன;—
சாதலும் புதுவ தன்றே;—வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன் றும் இலமே;—முனிவின்
இன்னா தென்றலும் இலமே;—மின்னொடு
வானந் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கு மல்லல் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறலோர்
காட்சியிற் தெளிந்தனம்;—ஆசலின் மாட்சியிற்
பெரியோரை வியத்தலும் இலமே;—
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே!
('ஜி. யூ. போப்' ஆப்த பூர்வகமாய் ஸர்வ
மங்கள் வித்தியார்த்தம் அனுப்பியது.)

### THE SAGES.

To us all towns are one, all men our kin.
Life's good comes not from other's gift, nor ill ;
Man's pains and pains' relief are from within.
Death's no new thing ; nor do our bosoms thrill
When joyous life seems like a luscious draught.
When grieved, we patient suffer ; for we deem
This much-prized life of ours a fragile raft
Borne down the waters of some mountain stream
That o'er huge boulders roaring seeks the plain.
Tho' storms with lightnings' flash from darken'd skies
Descend, the raft goes on as fates ordain.
Thus have we seen in visions of the wise !—
We marvel not at greatness of the great ;
Still less despise we men of low estate.

G. U. POPE,
With all kindest good wishes.

* This Agaval is by a minstrel, known to us as Kanyan (or 'Singer') of the flowery hill, who was a court poet and friend of Ko Perum Coran of Urraiyur,—a little, it may be, before the date of the *Kurral.* see *Purra Nannurru,* 67, 191, 192, 212. Compare, Kurral 397, பழமொழி, 116.—G. U. POPE.

## THE UNIVERSITY OF MADRAS.

### ADMISSION TO COLLEGES.

The following correspondence has been sent to us for publication :—

Ref. on P. C. No. 4803. Dated 4th June, 1916.

To The Registrar of the Madras University, Madras.

Sir,—On behalf of the Educational and Parents' Commitee of the Chidren's Educational Movement, 1 have the honour to submit to you a Memo randum explaining the unreasonableness of the principles that are reported to have been laid down for the admission of the pupils who have completed their School final course into Colleges. It is apprehended that if the admissions are made according to the principles now adopted, many eligible students would be kept out and many others who are ineligible will find admission into the Colleges. This will in addition to causing much public dissatisfaction, seriously affect not only the efficiency of the Colleges but also the results of the Intermediate Examination to be held in March 1918. I therefore request that you will place this Memorandum before the next meeting of the Syndicate for suitable modifications to be made in the rules framed for declaring the eligibility of students for admission into Colleges.

I have the honour to be,

Sir,

Your most obedient servant,

C. V. SWAMINATHAIYAR.

---

MEMORANDUM.

It is given out that it has been decided by the school-final moderation board to make selections of students for the Intermediate course on the following basis :

1. One should have got marks in all the A and C group subjects, which should not be below the Presidency Averages in the subjects.

2. In case one has failed to secure the Presidency Average in any of the A group subjects other than English he can be eligible if the total of the marks got by him in all the A group subjects is not below the total of the Presidency Averages, provided he gets marks not below the Presidency Average in each of the two C group subjects, the marks being either those of the Public Examination or the moderated marks.

The above principle seems to be all right on paper, but when considered in detail it will be found that the principle is not well conceived. Taking for instance a student who has to take the third group of the Intermediate Scheme what is wanted for him is a knowledge of English coupled with sufficient qualifications in Vernacular Composition and Translation in the A group. According to the principles laid down as above by the moderation board, a student who gets 33 per cent. or thereabouts in English, a bare average in Vernacular Composition and Translation and good marks in Elementary Mathematics may become eligible. Suppose one gets 33 marks in English 50 marks in Elementary Mathematics and 40 marks in Vernacular Composition and Translation he may become eligible, by reason of the total of his marks, viz., 123 being above 121, the total of the Presidency Averages. But the boy is clearly ineligible for the Intermediate course, which requires a decent knowledge of English for him to be able to follow the College lectures intelligently ; but another who may get 45 marks in English, 20 marks in Elementary Mathematics and 50 marks in Vernacular Composition and Translation is ineligible according to the principle laid down, though it must be presumed that he is decidedly a better boy to be admitted for the University course than the other. By the admission being made on the principle now laid down a large number of incapable boys will crowd into our Colleges with the result that a large number fo students appearing for the Intermediate Examination will be ploughed down by failure in English, History and Logic which require a sound knowledge of English. In this manner instances may be multiplied of a large number of eligible pupils being kept back by admission being made on the above principles. In Physics

புஸ்தகம்-24.] [சஞ்சிகை-3.

"The Children's Favourite, the Teachers' Help, and the Parents' Guide."

நள ௵ ஆனி ௴

# விவேக சிந்தாமணி

June-July. 1916.

ESTABLISHED 1892

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றே மேனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னெஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

## "THE SLAUGHTER OF THE INNOCENTS."

## பள்ளிப்படிப்பும் பிள்ளைகளின் தவிப்பும்.

பள்ளியில்படிப்பது பிள்ளை கடைத்தேற வேண்டியென்பார்கள். ஆனால் பள்ளிப்படிப்பினாலுண்டாகும் தவிப்புச் சில சமயங்களில் பொறுத்தல் முடியாததாயிருக்கிறது. "பெற்றவளுக்கே தெரியும் பிள்ளையின் அருமை" யென்பதுபோல், பள்ளியில் படித்து பரீக்ஷை கொடுக்கவேண்டிய நிர்ப்பந்தத்துக்குள்பட்டவர்களே பிள்ளைகள் படும் அவதியை உணர வல்லாராவர். மேலோர் "சித்திரமும் கைப்பழக்கம், செந்தமிழும் நாப்பழக்கம், கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்" என்றுசொல்லியிருக்கிறார்களாயினும், இக்காலதப் பள்ளிப்படிப்பு இதற்குமுற்றும் விரோதமாயிருக்கிறது. "ஏட்டுச்சுரைக்காய் கறிக்கு உதவாது" என்னும் பழமொழிபோல், கைப்பழக்கம், நாப்பழக்கம், மனப்பழக்கம் இல்லாத கல்வி காரியத்துக்குதவுவதாயில்லை. முதல்முதல் பிள்ளைகளுக்குத் தங்கள் தாய்பாஷையில் கல்வி போதிக்காமல் அந்யபாஷையில் கல்வி போதிப்பது அநர்த்தமாகமுடிகிறது. அதனால் மனதுக்கும் வாக்குக்குமுள்ள உறவு அற்றுப்போகிறது—முற்றும் அற்றுப்போகாவிடில் தட்டுக்கெட்டுத் தடுமாறிவிடுகிறது. இந்தத் தடுமாற்றத்தால் மனப்பழக்கம், நாப்பழக்கம் இரண்டும் குறைவுற்று நிறைவெய்தாதுபோகிறது. 10, 12-வயதுக் குழந்தைகளுக்கெல்லாம் கணிதமும் சாஸ்திரப் பயிற்சியும் அந்யபாஷையில் சொல்லிக்கொடுக்கிறார்கள். சொல்லிக்கொடுக்கும் வாத்தியாருக்குச்சுயபாஷையில் போதிக்க அப்பாஷா ஞானம் போதாது. போதுமானாலும் பள்ளிக்கூடவிதி இங்கிலீஷில்தான் போதிக்கவேண்டியதாயிருக்கிறது. இப்படியாக

---

and Chemistry also, the practical examination in which luck plays a large part has seriously affected many students, who otherwise would have been elgible by getting good marks in theory. It cannot be said, that by departing from its principle the number of admissions will increase, for if those are admitted who get good marks in the subjects which they mean choosing for the Intermediate course a good many (probably a corresponding number) will be rejected who get low marks in the necessary subjects such as English. That one gets low marks in Elementary Mathematics need not necessarily debar a student from admission into a College as that is not a necessary subject, required for the University course of a student who takes the 3rd group. It may reasonably debar one who takes either the 1st or 2nd group or if he intends to enter public service. For these reasons it is necessary that the Syndicate must interfere and suitably modify the principles before it becomes too late, for the old story of the slaughter of the innocents will repeat itself. It is given out that the English examiners in the last Intermediate Examination bitterly complained that the standard of attainments in English of the candidates who appeared for the examination was miserably low. If the rules framed for the eligibility are as they stand now, the members of the moderation board must be asked whether the candidates are to blame or they are to blame themselves.

எடுத்த எடுப்பிலே தப்புமுறைகொண்டு போதிப்பதால் பிள்ளைகள் கிளிப்பிள்ளைகள் கற்பதுபோல் சப்தமாத்திரத்தைக் கேட்டு நெட்டுருப் பழக்கத்தால் ஏதோ சிறிது உளரக்கற்றுக் கொள்கிறார்கள். இதையும் "வாத்தியார் சொன்னபடி தர்ப்பயாமி" என்று பரீக்ஷைக் காலத்தில் தானே தண்ணீர் இறைத்துத் தர்ப்பணம்செய்து வருகிறார்கள். தண்ணீர் என்பதற்கு பதிலாக "கருப்புமை" என்கிற வார்த்தையை உபயோகித்தால் அது மிகவும் நன்றாகப்பெருாந்தும், "Angle" "மூலை" அல்லது "கோணம்" என்றால் இன்னதென்று மனதில் பிடிபடாமல்தானே பீஜ கணிதம் படிக்கிறார்கள். இவர்கள் அந்தக் கணிதத்தில் படித்துத் தேறுவதுயெப்படி? இப்படியே சாஸ்திரப் பயிற்சியும் அரைகுறைப் படிப்பாகவே முடிகிறது. ஆங்கிலபாஷையில் பயிற்சியின்மையினால் மற்ற எல்லாப்பாடங்களும் அரைகுறைப் பாடமாகவே நடந்தேறிவருகிறது, "அரைகுறைப் படிப்பு ஆபத்து" என்பது மெய்யாகவிருக்கிறது. ஏதோ நெட்டுருப் போட்டுப் படிக்கிற பிள்ளைகளும் பரீக்ஷையிற்றேற தாங்கள் எவ்வளவு மார்க்கு வாங்கவேண்டியதென்று தெரியாமல் ஏதோ பொட்டைக்குழிப் பாகப் பரீக்ஷையில் தேற முயற்சிக்கிறார்கள். 10 வருஷம் பிள்ளையை அரும்பாடு பெரும்பாடு பட்டுப் பள்ளியில் படிக்கவைத்தபிறகு ஸெகண்டரி ஸ்கூல் பரீக்ஷைமுடிவு ஆனதும் காலேஜில் வாசிக்கவேண்டியகாலம் வருகிறது. இந்தப் பரீக்ஷையில் தேறுவது பெரும்பான்மையான பிள்ளைகளுக்குச் சூதாட்டத்தில் தேறுவதுபோல்தானிருக்கிறது. எல்லாப் பிள்ளைகளும் ஆங்கிலபாஷா ஞானமுற்றிருக்க வேண்டும். இங்கிலீஷ்பாஷைப் படிப்போடு ஸ்வபாஷையில் வியாஸமெழுதவும் மொழி பெயர்க்கவும், தெரிந்திருக்கவேண்டியதவசியம். இஃதோடு கணிதசாஸ்திர ஞானமும் சிறிதிருக்கவேண்டியது. ஆங்கிலம், ஸ்வபாஷை, கணிதம் இம்மூன்றும் (A Group) ஒரு முக்கூட்டுப் படிப்பு ஆகிறது. இதற்குமேல், கணித சாஸ்திரமோ, பூத பௌதிகசாஸ்திரமோ, சரித்திரப்பாடமோ, ஸம்ஸ்கிருதம் முதலான வேறுபாடமோ பிரத்தியேகமாக வரவேண்டியது.

"எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்" என்பது முதுமொழி. அந்த எண்ணும் எழுத்தும் ஸ்வபாஷா ஞானமும் ஸ்வபாஷையிற் போதனையும் குறைவாயிருப்பதுபற்றி "கண்ணெனத்தகும்"படியான குணம் பெறாமல் "புண்ணெனத்தகும்" பதவியிலிருக்கிறது. இப்படி மனக்கண்தானே புண்ணானால், பார்வை குருட்டுப்பார்வை யாவதற்

---

UNIVERSITY OF MADRAS.

No. 3979 Senate House, 7th June 1916.

From Francis Dewsbury, Esq., B.A., LL.B.,
Registrar, University of Madras.

To M.R.Ry. C. V. Swaminathaiyar Avergal
Mylapore.

Sir,—In acknowledging your letter No. 4803, dated 4th June 1916, handed to me to-day and the memorandum enclosed therewith, I have the honour to state that the selection of School-leaving Certificates holders eligible for University Courses of Study has been completed and that no alteration in the principles of selection for this year is now possible. In this connection, however, I have to remark that the principles of selection detailed in your memorandum as being those adopted for this year are very different from the principles actually accepted by the Syndicate and its Committee, upon which the eligibility of students for University Courses of Study was determined. Consequently your memorandum, being based upon mistaken premises, is valueless as a criticism of the selection of students this year. A large number of the students for whom your memorandum pleads have actually been selected for admission to Colleges. I do not, therefore, propose to place your communication before the Syndicate.

I have the honour to be,
Sir,
Your most obedient servant.
(Sd.) FRANCIS DEWSBURY.
Registrar,

குக் கேட்பானேன். குருட்டுப் பார்வையுள்ள கண் பெற்றும் "கண்ணைக்கொடுத்ததெய்வம் கோலைக் கொடுக்கும்" என்கிறபழமொழிப்படி தன்முயற்சியால் பிள்ளைகள் கடைத்தேறும்வழி ஏற்படாமல், காலேஜ் ப்ரொபெஸ்ஸர்கள் சிலர்கூடி மேலேபடிக்கத்தக்கவர்கள் யாரென்று அவர்களுக்குத் தோன்றுகிறதோ அவர்கள் மட்டும்தான் மேலே படிக்கலாமென்றொரு நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. "எருதின்நோவு காக்கைக்குத் தெரியுமா?", அதுபோல இளம் பிள்ளைகள் பாலப்பருவம் முதற்கொண்டு அந்யபாஷையில் எல்லாப்படிப்பும் படித்துவருகிற கஷ்டம் காலேஜ் ப்ரொபெஸ்ஸர்களுக்கு என்னமாகத் தெரியும்? அவர்கள் ஏதோ ஒரு முறைபற்றி 100-க்கு 20 அல்லது 25 பேர்கள் தேறும்படியான திட்டம்போட்டு மற்றவர்களெல்லாரும் பரீக்ஷையில் தேறினார்களில்லையென்று விளம்பரப்படுத்தி விடுகிறார்கள். பிள்ளைகளுக்காவது தம் பிள்ளை கடைத்தேறுவதில் கண்ணும் கருத்துமாயிருக்கும் பெற்றோர்களுக்காவது இப்பரீக்ஷையில் தேறல் தேறாமையின் குட்டு (இரகஸியம்) இன்னதென்று கண்டுபிடிப்பது கஷ்டமாயிருக்கிறது. 16-வயதுப் பிள்ளைகளெல்லாம் "நீ 10 வருஷகாலமாகப் படித்ததெல்லாம் வீண் படிப்பு" என்று சொல்லக் கேட்டால் அவர்கள் மனம் எப்படி நொந்து புண்ணாகுமென்பதைப் பிள்ளைகளை வளர்த்த புண்யவான்கள் அறிவார்களேயன்றி கூலிக்கு மாரடிக்கும் பெண்டீர்கள்போல வேதனத்துக் குழைக்கும் பரீக்ஷிகர்களாவது பள்ளிப் பிள்ளைகளின் மனவியல்பறியாத ப்ரொபெஸ்ஸர்களாவது உள்ளபடி அறிவது துர்லபம். இது பரீக்ஷையின் கொடுமையேயன்றி அப்பரீக்ஷை நடத்த இன்றியமையாதவர்களான பரீக்ஷகர்கள் கொடுமையல்ல.

"வெண்காரம் வெய்தெனினும் நோய் தீர்க்கும்; சிங்கி குளிர்ந்தும் கொல்லும்" என்பது

---

Ref. on P. C. No. 4807 Dated 8th June 1916.

To the Registrar of the University of Madras, Madras.

Sir,—In acknowledging with thanks your reply No. 3979, dated 7th instant, just to hand, I have the honour to request you will be good enough to state "the principles actually adopted by the Syndicate and its Committee, upon which the eligibility of students for University Courses of Study was determined." The principles if they are different, must be of sufficient importance for parents and students to know. So far as I was able to ascertain I found that a student who has actually obtained 8 per cent. over the Presidency Averages in English and Vernacular Composition and Translation and who intends taking up the History Course or 3rd group of subjects in which he has obtained 15 per cent. over the Presidency Average and also 9 per cent. over the Presidency Average in Sanskrit, would be declared ineligible by reason of his marks in Ele-mentary Mathematics (a subject which is certainly not required for his selected course of study in the College) being insufficient to bring up the total of his marks in A group either in the Public Examination or the moderated marks to the limits fixed according to the principle which you say have been adopted by the Syndicate and its Committee the moderation board. I have personal knowledge of the fact that there are many other students who are similarly circumstanced and who, by the principles not being enunciated by a more careful consideration have become ineligible, though judging by the marks they have got in the subjects required for the 3rd group of the Intermediate scheme, they are much more eligible than those who, having got lower marks in English have become eligible from the absolute standpoint of minima adopted by the Committee.

I think you will agree with me that the matter is of sufficient importance to need elucidation in the most authentic manner, especially after you have declared my Committee's memorandum as "being based on mistaken premises" for which reason you state you propose withholding it from being placed before the Syndicate for its consideration. An early reply will relieve the tension of the public mind which certainly exists, because of the mystery surrounding the principles of selection which have been approved.

I have the honour to be.

Sir,

Your most obedient servant,

(Sd.) C. V. Swaminathaiyer.

வித்வத்வாக்கு. உண்மைப்படிப்பு முதலில் கஷ்டத்தை விளைத்தாலும் அதனுடைய சிக்ஷை தீக்ஷைகள் மனவிருளைப்போக்கி ஞான தீபத்தைப் பிரகாசமாக எரியச் செய்யும். இது வெண்காரம் உஷ்ணமான வஸ்துவாயினும் நோய் தீர்க்கும் மருந்தாவது போலாம். விஷம் உண்டதும் உடம்பு சிலிர்க்கக் குளிர்ச்சியை உண்டுபண்ணினும் முடிவில் உயிரை வாங்குமாபோல் இந்தப்பரீக்ஷை முறை "என் பிள்ளை 10-வருஷம் படித்து பரீக்ஷை கொடுத்துவிட்டான்" என்கிற மனக்குளிர்ச்சியை உண்டு பண்ணினும் அது முற்றிலும் ஏட்டுப் படிப்பேயாவதுபற்றி மனப்பழக்கம், நாப்பழக்கம், கைப்பழக்கம் இளமையில்தானே சரிவர ஏற்படாத தோஷத்தால் பின்னுக்கு ஆயுஸ் முழுவதும் அநர்த்தம் விளைத்து ஆபத்துக்கிடமாக முடிவதாயிருக்கிறது. ஆகையால் இந்த அரைகுறைப் படிப்பினால் வரும் ஆபத்தை நிவர்த்திக்க பெற்றோரும் பிள்ளைகளும் ஊக்கங்கொண்டுழைத்து முயற்சித்து வரல்வேண்டும். இல்லாவிட்டால் எண்ணைச் செலவும் இளமை நஷ்டமும் தவிர பிள்ளைகள் கடைத்தேறும் வழி ஏற்படுவது கஷ்டமாக முடியும். பள்ளிப்படிப்பைச் சீர்திருத்த நம்மாலாகுமாவென்றிருந்தால் காரியம் ஆகாது. பிள்ளையைப் பெற்றபின் அவர்களை வளர்த்து வித்யா ஸம்பன்னராகச் செய்வது பெற்றோர் தம் கடமையாம். இராஜாங்கத்தார் இதற்கு அனுகுணமான சாதக சாதனங்களை யேற்படுத்தக் கடமைப்பட்டிருப்பினும், அவர்கள் ஏற்படுத்தும் சாதக சாதனங்கள் நம்து பிள்ளைகள் பிழைப்பதற்கு ஏற்றவையாக விருக்கின்றனவா இல்லையாவென்று பார்க்கும் பொறுப்பு பெற்றோரைச் சேர்ந்ததே. ஆகையால் பெற்றோர் தம் கடமையை நிறைவேற்ற விவேகத்தோடுழைக்க வேண்டும். விவேக ஞானமில்லாத படிப்புப் படிப்போடு சேர்ந்ததில்லை.

இந்த வருஷம் நடந்த ஸ்கூல் அறுதிப்பரீக்ஷையில் 11-ஆயிரம் பேர்கள் ஆஜாராக அவர்களில் 2500-பேர்கள் தவிர மற்ற 8500 பேர்கள் காலேஜில் படிக்க சேர்த்துக்கொள்ளப் படமாட்டார்களென்று தெரியவருகிறது. இது விஷயமாக பாலபோத வித்யா சங்கக்கமிட்டிக்கும் யூனிவர்ஸிடி ரிஜிஸ்திராருக்கும் நடந்த கடிதப்போக்குவரத்தின் முதற்பகுதியை முன்னேட்டில் வெளியிட்டிருக்கிறோம். ரிஜிஸ்திராருடைய முடிவான பதிலை எதிர்பார்த்துக்கொண்டு மேலொன்றும் எழுதாமல் விடப்பட்டிருக்கிறது, தனிப்பாடங்களில் 100-க்கு 40-க்குமேல் வாங்கி A Group மொத்தத்தில் 37 வாங்கினவர்களெல்லாம் தள்ளுபடியாயிருக்க இங்கிலீஷில் மட்டும் 100-க்கு 33 வாங்கினவர்கள் பரீக்ஷையில் தேர்ந்து தேறினவர்களாகத் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள். இதனால் ஆங்கில பாஷையில் ஞானம் குறைந்தவர்கள் 'இண்டர்மீடியேட் பரீக்ஷை'யில் ஏராளமாகத் தேறாதுபோவார்கள். இந்த வருஷம் 'இண்டர்மீடியேட் பரீக்ஷை'யில் 100-க்கு 25 பேர் விகிதம்தான் தேறியிருக்கிறார்கள்.

---

## SIR HARCOURT BUTLER ON EDUCATION.

### வித்யாலக்ஷியத்தைப்பற்றி ஸர் ஹார் கோர்ட் பட்லர் அபிப்ராயம்.

ஸர் ஹார்கோர்ட் பட்லர் அவர்கள் இந்தியா கவர்ன்மெண்டில் வித்யா இலாகாமந்திரியாகவிருந்து பிரக்கியாதிபெற்று இப்பொழுது பர்மா உதவிக் கவர்னராக விருக்கிறார். அங்கே அவர் மெய்மேயோவிலுள்ள ஸெயின்ட் மைகேல்ஸ் வித்யாசாலையில் பரிசளிக்கும் போது அக்கிராசனம் வகித்திருந்து வித்யா போதனைமுறையையும் வித்யா லக்ஷியத்தையும் பற்றிச் சில அருமையான வார்த்தைகள் சொன்னார். அவருடைய வார்த்தைகளின் அருமை, அவர் வித்யாபோதனையின் உண்மை நோக்கத்தை உள்ளபடி யறிந்தவராயிருப்பதினால்;

விசேஷமாகக் கவனிக்கத்தக்கதாக விருக்கிறது. "பள்ளிப்படிப்பு" என்றால் "பரீக்ஷை கொடுக்கிறது" என்கிற தப்பெண்ணம் எப்படியோ வழக்கத்தில் வந்துவிட்டது. பிள்ளைகளைப் பரீக்ஷிப்பது வித்யாபோதனை முறையென்பது வழக்கத்திற்கு வந்தபிறகு எத்தனையோ விபரீதங்கள் நேர்ந்திருக்கின்றன. "கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்" என்றபடி பிள்ளைகளுக்கு மனப்பழக்கம் என்பது (மனம் படியப் பெறுவதற்கான அப்பியாசமுறை) ஏற்படாமல் தானே பிள்ளைகளுக்கு எட்டுப்படிப்புச் சொல்லிக்கொடுத்துப் பரீக்ஷையில் தேறச் செய்துவிடுகிறார்கள். இது கிளிப்பிள்ளைப் படிப்பேயன்றி மனப்பழக்கம் தரும் கல்வியென்று சொல்வதற்கு ஹேதுவில்லாமலிருக்கிறது. இந்தத் தப்புவழக்கம் கூடாதென்றும் பரிக்ஷைசெய்வதும் பரீக்ஷையில் தேறுவதும் உண்மையான வித்யாபோதன முறைகளல்லவென்றும், பள்ளியில் பழகும் பிள்ளைகள் ஆசான் உறவால் தேஹப்பயிற்சி மனப்பயிற்சியில் தேர்ந்து குணவலி பெற்று விளங்குவதே உண்மையான வித்யாபோதனையென்றும், பரீக்ஷையில் தேறுவதே வித்யாபோதனையாக மதிக்குங்காலம் அனேகமாய்ப் போய்விடுமென்றும் சொன்னார். ஜீவனோபாயம் தேடுங்காலத்தில் குணவலியும் மனோவலியும் தேஹவலியும் அனுகுணமாயிருந்துதவுமேயன்றி பரீக்ஷையில் தேறினபேரும் எட்டுப்படிப்பைக்கொண்டு கொடுக்கும் யோக்கியதாபத்திரத்தின் சிபார்சும் பிரயோஜனப் படமாட்டாதென்றும், இனி வேலையிலமருங்காலையில் வேலைகொடுக்கிறவர்கள் பரீக்ஷை மதிப்பைவிட்டு குணமதிப்பையே பெரிதாகக்கொண்டு தக்க பேரைத் தெரிந்தெடுக்கும் காலம் சமீபித்து விடுமென்றும் செப்பினர். பெண்கல்வி எப்போதும் பிரயோசனகரமாகவே யிருக்கவேண்டியது என்றும் சொன்னார்.



LORD KITCHENER.

லார்ட் கிச்சனர்.

பிரிடிஷ் மஹாராஜ்யத்தின் யுத்த மந்திரியாகவிருந்து இப்பொழுது நடந்துவரும் மஹா பார'தப்போரை நடத்துவதில் அதிக ஊக்கமும் சாமர்த்தியமுமுள்ளவராகக் காட்டிவந்த லார்ட் கிச்சனர் அவர்கள் நாளது ஜூன்மீ 5உ யன்று இராத்திரி 8-மணிக்கு ஆர்க்னீஸ் தீவுகளண்டை மாலை 8-மணிக்கு 'ஹாம்ப்ஷைர்' என்னும் வேகமான சிறிய யுத்தக் கப்பலில் ருஷியாவுக்குப் போகும்வழியில் சுரங்கம் வெடித்தோ அல்லது 'டார்பிடோ' வென்னும் கடலில் மூழ்கிப்பாய்ந்து வெடிக்கும் வெடியந்திரப்படகினால் தாக்கப்பட்டோ கப்பலுடைந்து அவருடனிருந்த உத்யோகஸ்தர்கள் எல்லாரோடும் மூழ்கிப்போய்விட்டார். இவருக்கு இச்சமயம் திடீரென்று நேரிட்ட இவருடைய மரணமானது பிரிட்டிஷ் நாடுகள் முழுவதிலும் இதர நாடுகளிலும் மிகவும் துக்கிக்கப்படுகிறது.

இவர் 1850-ம் வருஷத்தில் பிறந்து 1870-ம் வருஷத்தில் இராணுவத்தில் சேர்ந்து 1898-ம் வருஷத்தில் எகிப்தில் மாதியை ஓம்டர்மன் சண்டையில்வென்று பிரபல கீர்த்திபெற்றார். பிறகு ஸர்தார் பட்டம்பெற்று ஓம்டர்மனில் ஜயித்ததற்காக பார்லிமெந்து சபையார் 30 ஆயிரம் பவுன் அவருக்கு இனாம் கொடுக்க அதைப் பெற்றுக்கொண்டு உடனே நடந்த தென்னாபிரிகா யுத்தத்தில் லார்ட் வோல்ஸ்லி அவர்கள் தலைமையின்கீழ் போர்செய்து, லார்ட் ராபர்ட்ஸ் அவர்களுக்குப்பின் அவ்விடத்திலுள்ள பிரிடிஷ் சேனைகளுக்கெல்லாம் முக்கிய தலைவராயிருக்கும் பதவிபெற்று தென்னாபிரிகாவை சமாதானப்படுத்துவதில் பெரு முயற்சி செய்துழைத்துவந்தார். தென்னாபிரிகாயுத்தத்தில் ஜயித்ததற்காக அவருக்கு 50 ஆயிரம்பவுன் இனாம் கொடுத்ததோடு விஸ்கௌண்ட் என்கிற பிரபுப்பட்டமும் அளிக்கப்பெற்றார். பிறகு 1902-ம் வருஷமுதல் 1909-ம் வருஷம் வரையில் லார்ட் கிச்சனர் இந்தியாவில் முக்கிய சேனாதிபதியாகவிருந்து இந்திய சேனைகளையும் ஸ்வதேச ராஜாக்கள் ராஜ்யப் பொது உதவிக்காக வென்று பழக்கிவைத்துக் கொண்டுவந்த "இம்பீரியல் ஸெர்விஸ்" துருப்புகளையும் சீர்திருத்தி நல்ல பதவிக்குக்கொண்டுவந்தார். இப்பொழுது யுத்தம் ஏற்பட்டவுடன் இந்தியசேனைகளும் இம்பீரியல் ஸெர்விஸ் துருப்புகளும் காலதாமதமின்றி சரேலென்று புறப்பட்டு தூரதேசங்களிலுள்ள ப்ரான்ஸ் முதலான யுத்தகளங்களுக்குப் போகுவது சாத்தியமாக விருந்தது அவர் இந்தியாவிலிருந்தபொழுது செய்த சீர்திருத்தங்களினாலேயே யென்றறியவேண்டியது.

"இந்தியர்கள் ஜெர்மானியரை ஹதம் செய்து துரத்தல்."



சேனைகளை முஸ்தீபுசெய்து யுத்த சன்னத்தராகச் செய்வதில் இவரைப்போன்ற சாமர்த்தியமுள்ளவர்கள் வேறு இல்லையென்றே சொல்லலாம். இப்பொழுது நடக்கும் யுத்தம் துவக்கினபொழுது பிரிடிஷ் தீவுகளில் லக்ஷத்து 50 ஆயிரம் துருப்புகள்தான் யுத்த சன்னத்தர்களாயிருந்தார்கள். யுத்தம் ஆரம்பித்ததுமுதல் 50 லக்ஷம் பிரிடிஷ் சைனியம் தயார்செய்து அங்கங்கே நடக்கும் யுத்தகளங்களுக்கு அனுப்பியிருக்கிறார். இத்தனை பேர்களைச் சேர்த்து யுத்தம்செய்வதில் பழக்கி அவர்களுக்கு வேண்டிய யுத்த தளவாடங்களெல்லாம் சேகரித்து வழியில் ஆபத்து நேரிடாதபடி சாவதானமாய் அவர்களை எதிரிக்குத்தெரியாதபடி யுத்தகளத்துக்கு அனுப்பிவருவது இலகுவான காரியமல்ல. இந்த கஷ்ட சாத்தியமான காரியத்தை அவர் வெகு தீவிரமாய்ச் செய்து முடித்ததன்றி மேன்மேலும் கை சளைக்காமலும் ஜனங்கள் ஊக்கம்குறையாமலும் சேனைகளைச் சேகரித்து தர்பீதுசெய்து அனுப்பிக்கொண்டேயிருந்தார். இவருடைய பெருமுயற்சியாலே யுத்தம் இதுகாறும் கூட்டாளிகள் கை சளைக்காதபடி நடத்துவது சாத்தியமாகி வந்

தது. இப்பொழுது எதிரிகளை மடக்கியடக்க கூட்டாளிகள் சைனியங்கள் எல்லாம் சேர்ந்து ஒருமனதுப்பட யுக்திசெய்து தாக்க வேண்டுமென்று அதற்காகவே ருஷியாவுக்குப் போய்க்கொண்டிருந்தார். வழியில் இந்த ஆபத்து நேர்ந்துவிட்டது. இச்சமயத்தில் எவ்வளவு திறமைசாலிகளாயிருந்தாலும் இறந்தவர்களைப்பற்றி மனஞ்சலித்துக்கை சளைக்க நேரமில்லை. ஆதலால் இவருடைய ஸ்தானத்தில் வேறு தக்கவர்கள் யுத்தமந்திரி ஸ்தானத்தை வகித்துச் சண்டையை இடையூறின்று நடத்திவருவார்கள் என்பதற்குச் சந்தேகமில்லை. தற்காலம் யுத்தமந்திரி வேலையை முதல் மந்திரியாகிய கனம் மிஸ்டர் ஆஸ்குவித் அவர்களே சத்தியாக மேற்போட்டுக்கொண்டு பார்த்துவருகிறார். தெய்வ சங்கல்பம் எப்படியிருந்தாலும் மனஞ்சலிக்காது ஊக்கத்தையும் கைவிடாது உழைப்பவர்கள் எப்படியும் ஜயசீலர்களாவார்கள். "தெய்வத்தானாகாதென்னும் முயற்சி தன் மெய்வருத்தக்கூலிதரும்" என்பது உண்மையே. இந்த உண்மையை நம்பி உழைப்பவர்கள் ஒருபோதும் சிறுமைப்படமாட்டார்கள். மிஸ்டர் லார்ட் ஜார்ஜ் யுத்தமந்திரியாக நியமிக்கப்பெற்றிருக்கிறார். அவருடைய ஸ்தானத்தில் தளவாட மந்திரி வேறு நியமிப்பார்கள்.

## WAR NOTES.

### யுத்த சமாசாரம்.

சில மாதங்களாக யுத்த களங்களின் சமாசாரம் ஒன்றும் தலை கால் புரியாதபடியிருந்ததால் அவைகளைச் செப்பி மனக்குழப்பமுண்டு பண்ண நிமித்தமில்லையென்று சுமமாவிருந்துவிட்டோம். இப்பொழுது மேலண்டைப் போர்க்களத்தில் ஒருகோடியில் வேர்டேன் (Verdun) என்னுமிடத்திலும் மற்றொரு கோடியில் ஈபரேஸ் (Ypres) என்னுமிடத்திலும் சண்டை வெகு மும்முறமாக நடந்து வருகிறதாகத் தெரியவருகிறது. அகழிகள் வெட்டி வெடிகுண்டுகள், வெடியந்திரங்கள் இவைகளைக்கொண்டு செய்யும் யுத்தத்தில் ஒரு தரத்தார் எதிரிகள் அகழிகளைப் பிடித்துக்கொள்வதும் மறுபடியும் அங்கிருந்து துரத்தப்படுவதும் சகஜமாக ஏற்பட்டு வருகிறது. ஆதலால் முடிவில்லாத தோற்பு கெலிப்புகளைச் சொல்லிச் சொன்னதை மறுத்தும் மாற்றியும் பின்னெழுதுவதில் பிரயோசனம் ஒன்றுமில்லை. சண்டை துவக்கி 22-மாசங்களாய்விட்டன. சைனியங்கள் ஒவ்வொரு போர்முனையிலும் ஏராளமாக மடிந்துவருகின்றன. உணவு பொருள்களுக்கும் சண்டைசெய்யும் ஆள்களுக்கும் அந்தந்த நாடுகளில் முட்டுகள் ஏற்பட்டுவருகின்றன. பிரிடிஷ் ராஜ்யத்தில் இதுவரையில் நிர்ப்பந்த ராணுவ சேவகமில்லாமலிருந்தது. இப்பொழுது அங்கேயும் ராணுவ சேவகம் நிர்ப்பந்தமாகச் செய்யப்பட்டிருக்கிறது. ஸ்வதாவாகச் சேர்ந்தவர்களைக்கொண்டு 50 லக்ஷம் சைனியம் சேகரித்தும் சேனையின் தொகை சண்டைமுனையில் நிற்பதற்குப் போதுமானதாகவில்லை. ஜெர்மனியில் சைனிய நஷ்டம் ஏராளமாக நேர்ந்து கையிருப்புச் சேனைகள் மிகவும் குறைந்துபோய் விட்டதாகத் தெரிகிறது. ருஷியர்கள் காகேஷஸ் மலைத்தொடர்ப் பக்கத்தில் ஜயம்பெற்று வருகிறார்கள். துருக்கியிலும் இத்தலியின் வட எல்லையிலும் சண்டை தொடர்பிடியாக நடந்துவருகிறது. மத்தியதரைக்கடற்கரை யோரங்களில் சண்டை கிளம்பியிருக்கிறதாகச் சமாசாரம் வந்து வெகு நாளாய்விட்டது. மேமீ 31உயன்று ஜெர்மானிய கப்பற் படைகளுக்கும் பிரிடிஷ் கப்பற்படைகளுக்கும் ஒரு பெரிய சண்டை நடந்தது, அதில் பிரிடிஷார் தரப்பில் 17 கப்பல்களும் ஜெர்மானியர் தரப்பில் 16 அல்லது 17 கப்பல்களும் யுத்தச் சேதமாய் மூழ்கிப்போயின. சண்டை முகத்துக்கு பிரிடிஷ் கப்பற்படைகளின் அதிபர் ஸர் ஜான் ஜெல்லிகோ அவருடைய கப்பற்படைகளுடன் வரவும் ஜெர்மானிய கப்பல்கள் இணைபிரிந்து ஓடியொளித்து அவர்கள் தேசத்துத் துறைமுகங்கள்போய்ச் சேர்ந்துவிட்டன. இந்த சந்தர்ப்பத்தில் யுத்த மந்திரி லார்ட் கிச்சனர் ஏறிப்போன கப்பல அப்படியே மூழ்கிப்போய் விட்டதாகத் தந்தி சமாசாரம் வந்துள்ளது. இன்னும் சில மாதங்களில் யுத்தம் மிகமும்முறமாய் அதிகரித்து ஒரு விதத்தில் தோற்பு கெலிப்புத் தெரியும்படியாக ஏற்படுமென்று ஊகிக்கக்கூடியதாயிருக்கிறது. ஆயினும் இத்தருணத்தில் நாளைச் சம்பவங்களைப்பற்றி இன்றைக்கு நினைப்பதும் அசாத்தியமாக விருக்கிறது. ஏனெனில் எந்த நிமிஷத்தில் என்ன சம்பவம் நேரிடுமோ, அது என்ன பிரமாதம் விளைக்குமோ யாராலும் சொல்ல முடியாமலிருக்கிறது.

# "FROM POVERTY TO POWER."

## "THROUGH NATURE TO GOD."

### "BY LOVE TO ALL."

"GOD IS LOVE : KNOWLEDGE IS POWER : OM."

"You will convince ; without arguing, you will teach ; not cherishing ambition, the wise will find you out ; and without striving to gain men's opinions, you will subdue their hearts. For Love is all-conquering, all powerful ; and the thoughts and deeds and words of Love can never perish.........to know that Love is universal, supreme, all sufficing ; to be freed from the trammels of evil ; to be quit of the inward unrest ; to know that all men are striving to realise the truth each in his own way to be satisfied, sorrowless, serene ; this is PEACE ; this is GOODNESS, this is IMMORTALITY ; this is DIVINITY ; this is THE REALISATION OF SELFLESS-LOVE."—*James Allen.*

FUNCTION OF RELIGION : ITS VITAL IMPORTANCE :

"Religion makes easy and felicitous what in any case is necessary (the acceptance of the universe as it is); and if it be the only agency that can accomplish this result, its vital importance as a human faculty stands vindicated beyond dispute. It becomes an essential organ of our life, performing a function which no other portion of our nature can so successfully fulfil. From the merely biological point of view so to call it, this is a conclusion to which so far as I can now see, we shall inevitably be led, and led moreover by following the purely empirical method of demonstration................

"THE LIFE OF RELIGION in the broadest and most general terms possible, is, one might say, that it consists of the belief that there is an unseen order, and that our supreme good lies in our harmoniously adjusting ourselves thereto. This belief and this adjustment are the religious attitude in the soul."—*Prof. W. James.*

"A platonising writer like Emerson may treat the abstract devineness of things, the moral structure of the Universe, as a fact worthy of worship.

"In those various Churches without a God which to-day are spreading through the world under the name of ethical societies, we have a similar worship of the abstract divine, the moral law believed in as an ultimate object."

"'Science' in many minds is genuinely taking the place of religion. Where this is so, the scientist treats the "Laws of Nature" as objective facts to be revered."—*Ibid.*

"Nature is always so interesting under whatever aspect she shows herself, that when it rains, I seem to see a beautiful woman weeping. She appears the more beautiful, the more afflicted she is."—*B. de St. Pierre.*

"For Beauty is Truth, Truth, Beauty—that is all
"Ye know on earth, and all ye need to know."—*Keats.*

---

## குறைவில் நிறைவு.

"திக்கற்றவர்க்குத் தெய்வந்துணை."

ஓம் ஸ்ரீம் ஹ்ரீம்.

கருடவாஹன குருகடாக்ஷ வீக்ஷண்யப்ராப்தரஸ்து.

சரண்.

"வஞ்சகமன் வாதனைக்கும் வன்பிறவி வேதனைக்கும்
அஞ்சியுனையடைந்தே னையா பராபரமே."—பட்டினத்தடிகள்.

துதி.

"அப்பநீ அம்மநீ அய்யநீ அன்புடைய மாமனு மாமியுநீ
ஒப்புடைய தாரமு முண்பொருளுநீ
ஓர்குலமும் சுற்றமும் ஒரூருநீ
துணையாயென் னெஞ்சந் துறப்பிப்பாய்நீ
இப்பொன்நீ, இம்மணிநீ, இம்முத்துநீ, இறைவநீ!
ஏருர்ந்த செல்வநீயே!"

### மதிவளர்காதலி.

"தசமியிலேசாகரத்துக்கப்பாலேறிச் சிலம்பொலியுமுனதுடைய இருக்கால்கண்டு
நிசமாகஸ்தூல சூக்ஷ்மத்தில் தோன்றி
நிஷ்களத்தில் நீயுநானு மொன்றேயாகி
அறிவில்லா ஆனந்த மயமேயாகி
அருள்வெளியாய் வரமருள்வா யகண்டரூபி!
சுசிவழியாய் சுசிமுகமாய்ப் பிள்ளைமுகம் பார்த்தாள்வாய்
சோதியே மனோன்மணியே ஸுதினவாழ்வே!"

### மலைவளர்காதலி.

"பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கள் மித்திரர்கள்-பக்கமுண்டெக்காலமும்
பவிசுண்டு தவிசுண்டு திட்டாந்தமாகயம-படரெனுந்திமிரமணுகாக்
கதியுண்டு ஞானமாங் கதிருண்டு சதிருண்டு-காயசித்திகளுமுண்டு
கறையுண்ட கண்டர்பா லம்மைநின்னருளிற்-கருத்தொன்று முண்டாகுமேல்
நதியுண்ட கடலெனச் சமயத்தையுண்டபர-ஞானவானந்த வொளியே
நாதாந்தரூபமே வேதாந்த மோனமே-நானெனுமகந்தை தீர்த்தென்
மதியுண்ட மதியான மதிவதனவல்லியே-மதுசூதனன்றங்கையே
வரைராசனுக்கிருகண் மணியாயுதித்தமலை-வளர்காதலிப் பெண்ணுமையே."

* * *

"பூதமுதலாகவே நாதபரியந்தமும்-பொய்யென் றெனைக்காட்டியென்
போதத்தினடுவாகி யடியீறுமில்லாத-போதபூரண வெளிக்குள்
ஏதுமறநில்லென் றுபாயமாவைத்து நினை-வெல்லாஞ்செய் வல்லசித்தாய்
இன்பவுருவைத்தந்த வன்னையே நின்னையே-யெளியேன் மறந்துய்வனோ!
வேதமுதலானநல் லாகமத்தன்மையை-விளக்குமுட் கண்ணிலார்க்கும்
மிக்கநின்மகிமையைக் கேளாதசெவிடர்க்கும்-வீறுவாதம் புகலும்வாய்
வாதநோவாளர்க்கு மெட்டாதமுக்கணுடை-மாமருந் துக்கமிர்தமே
வரைராசனுக்கிருகண் மணியாயுதித்தமலை-வளர்காதலிப் பெண்ணுமையே."

* * *

"பூரணிபுராதனி சுமங்கலைசுதந்தரி-புராந்தகி த்ரியம்பிகியெழிற்
புங்கவி விளங்குசிவ சங்கரி சகஸ்ரதள-புட்பமிசை வீற்றிருக்கும்
நாரணிமனாதீத நாயகிகுணாதீத-நாதாந்த சத்தியென்றுன்
நாமமேயுச்சரித் திடுமடியர்நாமமே-யானுச்சரிக்க வசமோ
ஆரணிசடைக்கடவு ளாரணியெனப்புகழ-வகிலாண்ட கோடியீன்ற
அன்னையே பின்னையுங் கன்னியெனமறைபேசு-மானந்த ரூபமயிலே!"

* * * *

"பூதமொடுபழகிவள ரிந்திரியமாம்பேய்கள்- புந்திமுதலான பேய்கள்
போராடுகோபாதி ராக்ஷசப்பேய்களென்-போதத்தை யூடழித்து
வேதனைவளர்த்திடச் சதுர்வேதவஞ்சன்-விதித்தானி வல்லலெல்லாம்
வீழும்படிக்குனது மௌனமந்த்ராதிக்ய-வித்தையை வியந்தருள்வையோ!
நாதவடிவாகியமஹா மந்த்ராதிரூபியே-நாதாந்த வெட்டவெளியே
நற்சமயமானபயிர் தழையவருமேகமே-ஞானவானந்த மயிலே
வாதமிடுபரசமயம் யாவுக்குமுணர்வரிய-மகிமைபெறு பெரியபொருளே
வரைராசனுக்கிருகண் மணியாயுதித்தமலை-வளர்காதலிப் பெண்ணுமையே.

—தாயுமானவர்.

## ON THE CULTIVATION OF MENTAL HAPPINESS AS A CHARACTERITIC OF MOTHERHOOD.

## அன்னைக்கழகு அகமகிழ் பயிற்சி.

எனதருமை அன்புள்ள சகோதரிகளே, இவ்வழகிய உலகில் நமக்குவேண்டிய சுகங்களை கருணைக்கடலாகிய ஜெகதீசன் ஏராளமாய் தந்திருந்தும் சிலவேளை நாம் ஏதோவொருமனக்குறைக்கு உள்ளாகி துன்பப்படுகிறோம். இதை யொழிக்கும்படியாக நாம் ஒரு சாதனம் தேடவேண்டும். அதனால் எப்போதும் சந்தோஷமாயிருக்கும்படியான பழக்கம் நம்மில் உண்டாகவேண்டும். சாதனமில்லாமல் ஒன்றையும் சாதிப்பது கூடாது. கண்விழித்து நாடகமுதலானது பார்த்துக் களிப்பதையும் சந்தோஷமென்பார்கள். நான் சொல்லவரும் சந்தோஷம் அப்படிக்கொத்ததல்ல. துன்பத்திலும் நாம் பெற்றிருப்பதைக் கொண்டு சுகமனுபவிக்கும்படியான பழக்கம் எதுவோ அது தான் அகமகிழ் பயிற்சி.

நமக்குண்டாகும் துன்பங்களில் அநேகம் நாம் செய்துகொள்பவைகளே. அல்ப விஷயங்களுக்கெல்லாம் கோபத்திற்கும் குறைகளுக்கும் உள்ளாகிறோம். ஆழமறியாமல் காரியங்களில் தலையிடுகிறோம். ஆகாப்பண்டங்களில் இச்சைவைத்து அனுபவிக்கிறோம். இச்செய்கைகளால் நேரிடும் துன்பங்கள் அநேகம். நமது செய்கைகாரணமல்லாமல் இராஜரீகமாய் வருபவை கொஞ்சம்.

நமது கெடுதிகள் எதினால் விளைகின்றனவென்று எண்ணிப் பார்க்கும்போது நாம் பெற்ற பேருகிய *இச்சாசுதந்திரத்தை †துர்விநியோகம் செய்வதினால் என்று வெளியாகும். எழுவகைத் தோற்றங்களில் மக்களாகிய நமக்கு இழிந்தனவாகிய விலங்கு பறவை முதலியன தம்மைப்படைத்த கடவுளின் நியமனங்களுக்குக் கொஞ்சமாவது மாறுபடாமல் தத்தம் செய்கைகளை சரிவர நடத்திவருகின்றன. தங்களுக்கு ஏற்பட்ட விதிகளினின்று பிசகும்படியான சுதந்திரம் அவைகளுக்கு இல்லை. ஆகையால் அவற்றின் சுகம் கெடுவதற்கு மார்க்கமில்லை. பட்சி முதலியவற்றை கவனித்துப் பாருங்கள். அவைகள் தத்தம் பேடைகளுடன் கூடிக்குலாவுவதையும் அவைகள் தம்மினத்தை நீடூழியாய் இருக்கும்படி செய்யும் கருமத்தை ஏற்பட்ட கிரமத்திற்கு கொஞ்சமாவது மாறுபடாமல் நடக்கிறதைப் பார்ப்பீர்களானால் ஆச்சரியப்படாமலிருக்க மாட்டீர்கள். அவைகளுக்கு நேர்ந்த விவேகக் குறைவிற்குத் தக்கபடி இச்சாசுதந்திரமும் குறைந்திருக்கிறது. அவைகள் நம்மைப்போல பயிர்செய்து உணவைப் பெறவேண்டிய அவசியமில்லை. கர்த்தன் செயலின் அழகைப் பாருங்கள். விவேகக்குறைவு இருப்பதால் உணவிற்கு பிரயாசைப்பட வேண்டியதில்லாமலே பட்சிகள் விருட்சங்களில் உண்டாம் கனிமுதலியவற்றால் தினம்விருந்துண்டு களிக்கின்றன. காக்கை முதலியவை முட்டையிட்டு குஞ்சு பொரிக்குங்காலம் சமீபித்தபோது ஆணும் பெண்ணுமாக கூடுகட்டுவதற்கு சாமக்கிரியைகளைத் தேடுவதில் படும்பாட்டையும், பிறகு தம்குஞ்சுகளுக்கு இரைதேடி அவைகளின் பவழம்போன்ற வாயில் புகட்டி உண்பிக்கும்படி தமக்குவேண்டிய இரையை எங்கும் இலேசில் கிடைக்கும்படி செய்திருக்கும் அழகிய செய்கையையும் கவனியுங்கள். பசு முதலிய மிருகங்கள் சூல்படவேண்டிய காலந்தவிர மற்றக் காலத்தில் அவ்விச்சை யற்றிருந்து அவைகளுக்கு நியமித்த வேலையைச் செய்து வருவதினால் அவைகளுக்கு நோய் நொடிகள் மட்டாயிருக்கின்றன. ஊண் உறக்கம் முதலியவற்றில் மனுஷனும் மிருகங்களுக் கொப்பானவனானாலும் பகுத்தறிவு இவனுக்குண்டாயிருப்பதினால் கருத்தன் நியமனங்களைத் தெரிந்துகொண்டு நடக்கவேண்டியவனாய் இருக்கி

* இஷ்டப்படுகிற விதம் செய்யும் சுதந்திரம்.

† அக்கிரமமாய் செலவழித்தல்.

ளுன். தெரிந்து நடந்து சுகப்படவும், தெரிந்து கொண்டு நடக்காவிட்டால் துன்பத்திற்கு உள்ளாகும் சுதந்திரத்தையும் பெற்றுவிட்டான். இச்சுதந்திரத்தின மேன்மையைக் கவனிக்காதவராய் துர்வினியோகம் செய்து துக்கங்களைப் பெருக்கிக் கொள்ளுகிறோம். நமக்குள்ள சுதந்திரத்தை எவ்வளவுக்கு கையாடலாம் எங்கு விடவேண்டும் என்று நமது பகுத்தறிவால் சுலப பிரயாசையினுல் தெரிந்துகொள்ளக் கூடியவர்களாயிருந்தும், சோம்பலுக்கு உள்ளாகி சித்தம்போனவாறு பிரவர்த்திக்கிறோம். கடினப்பிரசவங்களுக்கு நாம் பலமுறை ஆளாகிறோம். மருந்தும் கையுமாய் இருக்கவேண்டி வருகிறது. உண்டாகும் சந்ததிகள் நோய் நொடியற்று செழித்திருப்பதில்லே. பகுத்தறிவை கூர்மைபாக்கிக்கொண்டு *சித்தசுவாதீனத்தைக் கைக்கொள்வே மாகில் நமக்கு நேரிடக்கூடும் துன்பங்களில் பெரும்பாகம் ஒழிந்துவிடும். நாம் துன்பப்படும்போது நம்மையுமறியாமல் "கர்மம்" கர்மமென்று சொல்லுகிறோம். ஆம், நாம் முற்பகல் செய்தது பிற்பகல் விளைந்ததை † நிதரிசனமாய்க் கண்டோம். ஆகையால் நமக்குக்கிடைத்த இச்சாசுதந்திரத்தை வெகுசாக்கிரதையாய் கையாட வேண்டியவர் களாயிருக்கிறோம். நாம் சுதந்தரமில்லாதவர்களென்கிறதும் பொய்யல்ல. மனுஷன் செய்யக்கூடாததைச்செய்வதற்கு சுதந்திரமில்லேயேயொழிய, இவன் செய்யக் கூடியதில் சர்வசுதந்திரம் பெற்றிருக்கிறுன். அன்றியில் அச் சுதந்திரத்தை அத்துமீறி அநுசரித்தால் கேடுவருவது நிச்சயம்.

துன்பங்களால் பயனில்லாமற் போகவில்லே. நாம் செய்யும் துர்க்காரியங்களின் பயனுக துன்பங்கள் உண்டாகாமற்போனல் கடவுளின் நியமனங்களே (சட்டங்களே) நாம் நிறைவேற்றுவது எப்படி? அவரது ஆஞ்ஞைமுடிவுபெற வேண்டும், அதைக்கடக்கவல்லவர் ஒருவருமில்லே.

ஈசனுடைய நியமனங்களைக் கடக்குந்தோறும் நமக்கு துன்பம் உண்டாகிறது. அது நமக்கு நன்மை செய்யும்படி ஏற்பட்ட எச்சரிப்பு. இந்த எச்சரிப்பு நமக்கு அவசியம்வேண்டும். இல்லாவிட்டால் நமக்கு கிடைத்திருக்கும் பெரும்பாக்கியங்களெல்லாம் அவலமாய்ப் போய் விடும். நெருப்பிற்கு சுடுந்தன்மையுண்டல்லவா. அச்சுடுகையைத் தெரிவிப்பது நமது ஸ்பரிசம். சுடுந்தன்மையை ஸ்பரிசம் தெரிவிக்காமற்போனல் ஒவ்வொரு குழந்தையும் நிமிஷந்தோறும் தீய்க்கு இரையாகவேண்டிவரும். இந்த ஒரு திருஷ்டாந்தத்தைப்போல் எதிலும் பார்த்துக்கொள்ளலாம். இயற்கையின் நியமனத்தை நாம் கடக்கும்போதெல்லாம் நமக்கேதோவொரு நோய் உண்டாகி எச்சரிக்காமற்போனல் நன்மைக்கென்று ஏற்பட்டவைகளே நமக்கு பாதகமாய் முடியும். காருண்ணியக் கடவுள் நம்முடைய க்ஷேமதிற்காகவே நோயை யுண்டுபண்ணியிருக்கிறூர். அவைகளின் பிரயோசனம் உடனுக்குடன் நமக்குத் தெரிகிறதில்லே. பின்னிட்டுத் தெரியவரும். கொப்புங் கிளேயுமாய் செழித்திருக்கும் மரத்தை யொருவன் வெட்டுவதைக் கண்டபோது இன்னதற்காக வெட்டுகிறுனென்று நமக்குத் தோன்றுகிறதில்லே. அம்மரத்தினின்று பிறகு சுந்தரமான பெட்டியோ பேழையோ உண்டாகிறது. அதைக்கண்டபோது சந்தோஷமடைகிறோமல்லவா? அதுபோல துக்கங்கள் நம்மைவாட்டி மனதில் சிறுகச்சிறுக ஏறியிருந்த அசுத்தமெல்லாம் போக்கி நற்குணங்களே நம்மில் வெளியாகும்படி செய்தபோது துக்கங்கள் நமக்கு பாக்கியமாக விருந்ததாக அறிவோம்.

கற்பிற்கு அரசியான சீதாப்பிராட்டிக்கு நேர்ந்த துன்பங்களினுலல்லவா அக்குணமணிக்கு என்று மழியாப் புகழுடம்பு உண்டாயிற்று. போகபாக்கியங்களே அனுபவித்து கா

* மனதை அடக்கி ஆளுதல்.

† திருட்டாந்தமாய்.

லங்கழித்து மாண்டுபோனவர்களுடைய தொகையை யாரால் சொல்லி முடியும். இவர்களில் உத்தமர்களாயிருந்த சிலரைப்பற்றி மாத்திரம் நாம் தெரிந்து கொள்வதற்கு மார்க்கமுண்டாயிருக்கிறது. இச்சிலருடைய சரித்திரத்தை கவனமாய்ப் படித்துப்பார்ப் போமானால் இவர்கள் யாவரும் துன்பத்திற்கு உள்ளானவர்களாகவே யிருக்கிறார்கள். ஒவ்வொரு நெறியைக் கைக்கொண்டவர்களாய் அந்நெறியைச் சாதிக்கும் விஷயத்தில் தாங்கள் பட்ட அல்லல்கள் கொஞ்சமல்ல. கற்பெனும் தன்னுயிரினும் சிறந்த ஆபரணத்தைக்காக்கும் பொருட்டு சீதாப்பிராட்டி பட்டபாட்டை. ஆலோசிப் போமானால் நாம் இல்லற தருமத்தை நடத்துங்காலத்தில் நமக்குண்டாகும் கஷ்டங்களை துன்பமென்று சொல்ல வாய்கூசும்.

அதிர்ஷ்டவசத்தால் நமக்குக் கிடைத்திருக்கும் துரைத்தனத்தாலும் நாம் அடைந்திருக்கும் கல்விப்பயிற்சினாலும் சித்த சுவாதீனத்தைமாத்திரம் கைக்கொண்டு நடப்போமானால், கூடியவரையில் நம்வாழ்நாளை இனியதாக்கிக்கொண்டு இகபரசுகங்களையடைய யாதொரு தடையுமிராது. மனுஷப் பிரயத்னத்தையும் கடந்து நமக்கு துன்பங்கள் வருங்காலத்திலும் மற்றெந்தக் காலத்திலும் அகமகிழ்பயிற்சி எப்படி செய்யவேண்டுமென்பதை சீதாபிராட்டியின் சரித்திரத்தைக் கொண்டே தெரிந்து கொள்ளலாம்.

அந்தஅம்மணி தனது ஆபத்துக்கால ஆரம்ப முதல் தான் நடந்துகொண்ட திவ்விய சரித்திரத்தை வெகுசுருக்கமாக நினைவுகூர்வோம்.

கைகேசியின் சூழலால் தன் நாயகன் காட்டுக்குப்போகும்படி நேர்ந்தபோது நாயகனுக்கு அரசுபோய்விட்டதே தனக்கு போகபாக்கியங்கள் இல்லையே என்கிறதாய்க் கொஞ்சமாவது துக்கிக்கவில்லை. ஆனால் எதற்காகத் துக்கப்பட்டார்க ளென்றால் தன்னை மாமனார்வீட்டில் சௌக்கியமாயிருக்கும் படியாயும் தான்மாத்திரம் காட்டுக்குப் போவதாயும் தன் நாயகர் சொன்னசொல் தன் காதில் நாராசம்போல் துளைத்துச்செல்ல இப்படியும் சொன்னாரல்லவா வென்று விம்மி விம்மி அழுதார். உடனே நாயகரைப்பார்த்து தேவரீர், என்னவார்த்தை சொன்னீர்கள் ! சக்கிரவர்த்தி தங்களை காட்டுக்குப்போகும்படிகட்டளையிட்டால் அடியாளுக்கு வேறே கட்டளை வேண்டுமோ. பர்த்தா அனுபவிப்பதை மனைவியும் அவருடன் அனுபவிக்கிறவளன்றோ ? ஆகையால் தங்களைவிட்டுப் பிரிந்திருக்க கொஞ்சங்கூட சகியேன். தங்களுடன் இருப்பதே எனக்கு சுவர்க்கம். தங்களுடைய தோழமையினால் காட்டிலுள்ள தர்ப்பை மூங்கில் முதலியவை இலவம்பஞ்சு மான்தோல் முதலியவைபோல் மிருதுவாகும். தேவரீருடன் புல்லின்மேல்படுத்த போதிலும் பஞ்சணைமேல் படுப்பது போலாம். தேவரீருக்கு கிடைக்கும் உணவு கனியானாலும் கிழங்கானாலும் மற்றெதுவானாலும் எனக்கும் அதுவே அமிர்தம்போலாம். தாயையாயினும், தந்தையையாயினும், நம்மில்லத்தையாயினும், அங்கனுபவித்த சுகங்களையாயினும் கருதி சோகங்கொண்டு தங்களை மனம்நோவும்படி செய்யேன், என்று பலவாறாகச் சொல்லியும் தன்னை உடன்கொண்டு செல்ல இராமருக்கு இஷ்டமில்லையென்று தெரிந்து, தான் சீக்கிரம் உள்ளேபோய் மரவுரியொன்றை அணிந்து இராமரது கையைப்பற்றி நின்றார்கள்.

காட்டில் இவர்கள் எப்படி காலங்கழித்தனர்?

* பஞ்சவடிதீரத்தில் கோதாவரிநதியோரம் அழகானசோலையில் இலட்சுமணர்கட்டிய ஓர் † பர்ன சாலையில் இராமரும் சீதையும் இருந்துகொண்டு இலட்சுமணர் காலையில் கனிகிழங்கு முதலியவற்றைக்கொண்டுவர சீதாபிராட்டி நதியில் ஸ்நானம் செய்துவிட்டு கிடைத்த பண்டங்களைச்சமையல்செய்து, பர்த்தாவுக்கும் மைத்துனருக்கும் அன்னம்படைத்துதானும் உண்டு சந்

* ஐந்து ஆலமரமுள்ள கரை.

† இலைகளால் அமைத்த வீடு.

சந்தோஷமாக நாயகருடன் விளையாடிக்கொண்டிருப்பார். அச்சோலையில் நதியோரத்தில் இருவரும் உலாவிக்கொண்டிருக்கும்போது அவர்களைக்கண்டு ஒதுங்கும் அன்னத்தின் நடையைக்கண்டு இராமர் சீதையினுடைய நடையையும் அதையும்பார்த்து சிரிப்பதும், ஆண்யானை நதியில் நீர் அருந்தி திரும்பிப்போம்போது அதனது பெருமித நடையைப்பார்த்து தன்னுடன் கைகோர்த்துத்திரியும் இராஜயானையாகிய இராமருக்கு சமானம் யாரிருக்கிறாரென்று செறுக்குற்று சீதாபிராட்டி நகைப்பதும் உண்டு. அழகான இறகுகளைவிரித்து ஆடும் மயில்களையும், மான்களையும், பூங்கொம்புகளையும், மலைவீழருவிகளையும், இன்னும் இச்சிறுவிடத்தில் சொல்லக்கூடாத அளவிறந்த அற்புதக்காட்சிகளையுங் கண்டு ஒருவருக்கொருவர் காட்டிக்கொண்டு அகமகிழ்வார்கள். மாலையில் சூரியன் அஸ்தமிக்கும்போது தாமரைகள் குவிவது இயற்கை. இவர்களது கைகளாகிய தாமரைகளும் பகவதாராதனைநிமித்தம் தம்சிரமேற்குவியும். இவ்வாறாக தங்களைச் சூழ்ந்துள்ளதைக்கண்டு களிக்கும் இவ்வுத்தமபிறவிகளுக்கு, தங்கள் நாட்டைவிட்டதினாலாவது, அரசிழந்ததினாலாவது யாதொரு துன்பமுமில்லை. அரசுசெய்வதினால் ராஜாவுக்கு அதிக மனக்கவலையுண்டு. இராமருக்கு இவ்விடத்திலே யாதொரு கவலையுமில்லாமல் இருவரும் சுகமாகவிருந்தார்கள்.

இவ்வித சுகத்தைக்கெடுக்க பாவி இராவணன் வந்தான். பிந்தி நடந்ததை இங்குநான் சொல்லவேண்டியதில்லை. நான் எடுத்துக்கொண்ட விஷயத்திற்கு சம்பந்தப்படும்வரையில் பேசவேண்டியவளாய் இருக்கிறேன். ஆகையால் நான் இங்கு குறிக்கவேண்டியது என்னவென்றால், நம்வீடுகளில் அற்பவிஷயங்களாகிய துணி மணிக்கு எவ்வளவு சண்டை, கோபதாபம், மனக்கடுப்பு! இவற்றால் சுகமிழந்து எல்லாம்போய்விட்டதுபோல் 'மூலையில் படுப்பது எவ்வளவு தாழ்வு பாருங்கள்.

அரசு இழந்து காட்டிற்குவந்த தன்னுடைய நாயகருடன் தானும் மரவுரி தரித்துக்கொண்டு காட்டில் வசிக்கும்போது அங்கு பெற்றதைக்கொண்டு அவர்கள் எவ்வளவு சந்தோஷமுடையவர்களாயிருந்தார்கள். அவர்களுக்குக் கிடைத்த உணவாதிகளை யுண்டு தம்மைச்சூழ்ந்து எப்பக்கத்திலுமுள்ள ஈசனது அற்புதச் செய்கைகளைக்கண்டு அகமகிழும் சாதனையால் ஆநந்தமடைந்திருந்தார்கள்.

தமக்குக் கிடைத்ததைக்கொண்டு சுகிக்க அறியாத ஜனங்களுக்கு எல்லாப் பாக்கியங்களும் நிறைவாயிருந்தாலும் அவர்கள் நித்திய தரித்திரர்களே. பெற்றதைக்கொண்டு அகமகிழ்பவர்களுக்கு சக்கிரவர்த்திகளும் ஈடாகார் என்று சிறிது பழக்கத்தினால் சுவானுபவமாய் நாமே யறியலாம் என்கிற உண்மையை சீதாபிராட்டியின் சரித்திரம் சாட்சி பகர்கிறது.

இன்னொரு சிறந்தகுணத்தை நமது சீதாபிராட்டியினிடத்திலிருந்து நாம் கற்கவேண்டியவர்களாயிருக்கிறோம். தான் இலங்கையில் சிறைப்பட்டிருந்த ஏகாந்த நிலையிலும்,

"ராஜ்யம் உன்தம்பி பரதனுள நீ காட்டுக்குப்போ" வென்று கைகேசிசொன்ன காலத்தில் சற்றாகிலும் மனம் வாடாமல், முன்னிலும் மூன்றுமடங்கு மலர்ந்தஇராமருடைய * முகாரவிந்தத்தை நினைத்து நினைத்து, சீதாபிராட்டி இவ்வளவு பெருமையான சுபாவம் அவரைத் தவிர மற்ற யாரிடத்திலுண்டு. இப்படிப்பட்ட பிராணநாதனைப் பிரிந்துவிட்டோமேயென்று துக்கித்தார்கள்.

இங்குள்ள அழகைப்பாருங்கள். சீதாபிராட்டி இராமருடைய பெருந்தன்மையைக்கண்டு மகிழ்ந்தது இவ்வளவு அவ்வளவல்ல. அவளுக்கு தன் நாயகர்மீதிருந்த அன்பினால் இராஜ்யம்போனது லட்சியமாகவேயில்லை, தனது நாயகருக்கு அரசுபோக தன்னுடைய சுகங்களெல்லாம் போய்விட்டதே என்கிற தன் † சுயநலவாஞ்சையை முன்னிட்டு துக்கிக்காமல், அவரது குணநிசயத்தை நினைத்து நினைத்தல்லவோ துன்பப்பட்டார்கள். உத்தமர்களுடைய குணத்தை இங்கு நிதரிசனமாகக் காண்கிறோம்.

குணமுள்ள பதார்த்தங்கள் நமக்கிருந்து நம்மைவிட்டு நழுவினாலும், அவைகளில்லாமலிருந்தாலும் வருந்துவதினால் நமக்கு அதிக நன்

* முகமாகிய தாமரை.

† தன் சொந்த சுகத்தின் பொருட்டான ஆசை.

மையுண்டு. குணவழகின்மேல் நமது நாட்டம் எப்பொழுது செல்கிறதோ அப்போதே, மனத்தூய்மை நம்மில் உண்டாவதற்கு வழியுண்டாம். குணவழகை நாடாமல் அல்ப விஷயங்களில் நமது நாட்டம் சென்றுகொண்டிருந்தால் மனத்தூய்மையுண்டாகாது. துக்கம் அதிகரிக்கும். மனோசாந்தி நம்மை முற்றும் கைவிடும்.

துக்கங்களைப் பலமுறை நாமே வருவித்துக் கொள்ளுகிறோமென்பதற்கு இன்னொரு திருஷ்டாந்தமிருக்கிறது. நம்மில் நகைப் பயித்தியம் மெத்தவுண்டு. நாம்பெற்றிருப்பதுடன் திருப்தியடையாமல் ஏதோ வொன்றை சங்கல்பித்துக்கொள்ளுகிறது: அதில்லையே என்கிறதினால் உள்ள சந்தோஷம்போய் மனக்கடுப்பு உண்டாகிறது. இது நம்மோடு போவதில்லை. நாயகர்களையும் பிள்ளைகளையும் பாதிக்கும். பூணும் ஆபரணம் வாழ்க்கைக்கு இன்றியமையாததல்ல. ஊண் உறக்கமில்லாமற்போனால் காயம் அழிந்துபோம். நகையில்லாமற்போனால் நேர்வது ஒன்றுங்காணோம். இருப்பதினால்மாத்திரம் பலமுறை கள்ளரால் தீங்குண்டாகிறது. இதினுடைய இலட்சணம் இப்படியிருந்தும் இதில் ஏதோ ஒரு குறை நேர்ந்ததாக வைத்துக்கொண்டு, இதொன்று இல்லாமையால் உள்ள அநேகம் பாக்கியங்களை மறந்து நாம் துக்கிக்கிறதென்றால் நம்மில் எவ்வளவு அறியாமை வெளியாகிறது. சீதாபிராட்டி தான்பிறந்த விடத்தும் புகுந்தவிடத்தும் தனக்குண்டான உலகத்தை விலைக்கு வாங்கத்தக்க எவ்வளவு சிறந்த ரத்தினாபரணங்களை யெல்லாம் கழட்டி எறிந்துவிட்டு, நாயகரது தோழமையொன்றிருந்தால் போதுமென அவரது கையைப்பற்றிக்கொண்டு, நுழைவதற்கு அரிதான காட்டில் அவருடன்சென்று அங்குள்ள காட்சிகளைக்கண்டு இருவரும் ஆநந்தித்துக்கொண்டிருந்தார்கள். நமக்கு எல்லாமிருந்தும் நம்மனம் கல்பித்த குறையேயன்றி உள்ளதல்லாத ஓர் குறையை நினைத்துக்கொண்டு நம்மைச் சூழ்ந்துள்ள அநேக பாக்கியங்களை மறந்து நமக்கில்லாததைப் பெரிதாக வெண்ணுகிற நமக்கு சுகம்கிடைப்பது அருமை. நாம பெற்றிருப்பவைகளைக்கொண்டு ஆநந்திக்கப் பழகுவோமானால், நமக்குண்டாகும் சுகத்திற்கு அளவில்லை. நாம் பெற்றிருக்கும் நன்மைகளை உற்று உணர்வோமானால், அவை அநந்தமென்று ஏற்படும். நம்மைச்சூழ்ந்து எப்பக்கமும் கிடக்கும் ஈசனுடைய அற்புதச்செயல்கள் அளவிறந்தனவாயிருக்கின்றன. அவைகளைக்கண்டு மகிழும் படியான சாதனம் நம்மில் வேண்டும். ஞானாநந்தம் அளிக்கும் நூல்கள் பலவுள. இவற்றால் நமக்குள் உள்ளக்கிளர்ச்சியை பயிற்சிசெய்துகொண்டு நம்மையும் நம்மைச் சூழ்ந்தவர்களையும் சந்தோஷிப்பிக்கச் செய்யவேண்டுமேயன்றி கல்பனாகுறைகளை வைத்துக்கொண்டு நம்மையும் நம்மவர்களையும் துக்கத்திற்குள்ளாக்குவது சுத்த அநாகரீகமும் ஈசனிடத்து அன்பு அற்றவர்களின் செய்கையுமாம். நிமிஷந்தோறும் இலவசமாக பரமனுள்ளவிடத்திலிருந்து பெறும் நன்மைகள் எத்தனை! சூழ்ந்திருக்கும் அவரது அற்புதச் செய்கைகளைப் பார்த்துக் களிக்க கண்களைப் பெற்றிருந்தும், குருடனுக்கு அவைகள் பயன்படாமலிருப்பதுபோல நாம் அவைகளை பயன்படுத்திக்கொள்ளாமையால் நமக்கும் பிரயோசனமற்றவைகளாகவே யிருக்கின்றன. சுகம் வேண்டுவது நமது எண்ணமானால் எதுசெய்தால் அந்த சுகம் நமக்குக் கிடைக்குமோ அதைச்செய்யாமல் சுகத்தையிழக்கும் செய்கையல்லவோ நம்மில் நிரம்பியிருக்கிறது.

"தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க்
கல்லால் மனக்கவலை மாற்ற லரிது."

என்று திருவள்ளுவநாயனார் திருவாய்மலர்ந்தருளியவாறு ஈசனிடத்து நம்மை சமீபமாகச் சேர்ப்பிக்கும் சாதனையினாலல்லாமல் வேறுவிதத்தினால் நமது குறைதீராது. உள்ளக்கிளர்ச்சியுண்டாகாது. பார்ப்பாருண்டானால் நிமிஷந்தோறும் நம்மை விருந்துண்டு களிக்கும்படி செய்யும் அவரது சிருட்டிப்பொருள்களைக் கண்டு களிப்பதினாலும் ஆத்துமாநந்தத்தைத் தரும் நூல்களைப் படிப்பதினாலும், நல்லவர்களுடைய சாவகாசத்தாலும் எல்லாரிடத்திலும் அன்பைப்பாராட்டி நமது சுயநலவாஞ்சையை விட்டொழிப்பதினாலும், நமக்கு சுகங்கிடைக்குமேயன்றி இவைகளல்லாத மார்க்கங்களில் சுகமடைவோமென்பது பொய்யெனப் பெரியோர் அநுபவசித்தமாய் வெளியிட்டிருக்கிறார்கள். ஆகையால் நாமும் பெற்றதைக்கொண்டு அகமகிழ் பயிற்சிசெய்ய பிரயாசைப்படுவதில் நமக்கு ஜெகதீச னருள்புரிவாராக.

# "PEARLS OF FAITH"

SELECTED AND STRUNG TOGETHER FOR PARENTS AND CHILDREN TO WEAR.

(*From the Sayings of St. Vemanna.*)

ஆந்திரபாஷையில், பிரமக்ஞானியும், அருட்கவியுமாகிய,

வேமன்ன மகாகவி அருளிச்செய்த

பத்யங்கள்.

(*Third Series.*)

சிவத்தைக் கண்டமனம் மற்றொன்றில் தங்காது.

1. வானமுதம் நன்கு வயிறார மாந்தியபின்
ஆனமுதத் தாசையடுக்குமோ—தானதுபோல்
எங்குநிறை சிவத்தை யின்னருளாற் கண்டமனம்
தங்குறுமோ மற்றொன்றிற் றான்.

(இ-ள்.) தேவாமிர்தத்தை வயிறார உண்டபின், ஒருவனுக்குப் பசுவின்பாலில் விருப்பமுண்டாமோ? அதுபோல, சர்வவியாபகனான சிவஸ்வரூபத்தைத் தரிசித்தபின் மனம் மற்றொன்றைத் தியானிக்குமோ? தியானியாது.

தியானமில்லாத பூசை பயனற்றது.

2. இதயத் திலங்குமரு ளீசனை யுன்னாமல்
மதியற்றீர் வன்சிலையை வைத்துப்—புதுமலர்தூய்ப்
போற்றுகின்றீரென்னே புதுமையதிற்கண்டீர்
ஏற்றமுயிர் தன்னிலுமே யின்று.

(இ-ள்.) இருதய கமலத்தில் விளங்கும் அருட்சொரூபியாகிய, ஈசுவரனைத்தியானிக்காமல், மதியிழந்து சிலாவிக்கிரகங்களைப் பூசிப்பதேன்? உயிருள்ள பிராணிகளைக்காட்டிலும், அவ்விக்கிரகங்களில் என்ன புதுமையைக்கண்டு அவ்வாறு வணங்குகின்றீர்.

யோகியின் தன்மையை உலகத்தார் அறியமாட்டார்கள்.

3. மாயோகி தன்பெருமை மாநிலத்தாரோராமல்
ஆயவகை யெல்லாம் அவமதிப்பார்—தூயசெழு
வானமுதத் தின்சுவையும் மற்றவற்றின் புன்சுவையும்
தானறியுமோ கரந்தான் சாற்று.

(இ-ள்.) மகாயோகியின் பெருமையை ஞானமில்லாத லோகஜனங்கள் அறியாமல், பலவிதமாக இகழ்ச்சிசெய்வார்கள். எப்படியெனில் சுவைமிகுந்த, தேவாமிர்தத்தின் இனிமையையும், மற்றைப்பொருள்களின் சுவையின்மையையும், உண்ணும் நாவேயன்றிக் கையானது அறியவல்லதோ. அறியமாட்டாதன்றோ என்றபடி.

மனத் தூய்மையின் சிறப்பு.

4. உட்டூய்மை யோடு முனூற்றுமொரு நல்வினைதான்
எட்டுணைய தேனு மிழிபன்றே—மட்டுரும்
பூங்குழலா யாலின் பொருந்து விரையெத்துணைபார்
ஆங்குமர மெத்துணையாமாய்.

(இ-ள்.) நிர்மலமனத்தோடு செய்தசத்கர்மம் சிறிதாயினும் பெரும்பயனைவிளைக்கும். ஆலம் விதையானது சிறிதாயினும் அதிலிருந்துண்டாகும் மரம் எவ்வளவு பெரியதுபார்.

சிரவண மனனாதிகளாலே ஞானத்தைப் பெறவேண்டும்.

5. சொல்வார் சொற்கேட்டுத் துகளறவே யாராய்ந்து
நல்வகையி னுண்மைநலம் தெரிவான்—வில்வளைய
வாங்கினலன்னவெழில் வாணுதலாய் வாய்ந்திடுமால்
தீங்கிலா ஞானமெனத் தேர்.

(இ-ள்.) உபதேசித்தற்குரிய குருமுகமாக விஷயங்களைக் கிரமமாகக்கேட்டு, அதன்பின் தானாக அவற்றைச் சிந்தித்து, உண்மையைத் தெளிந்துகொள்பவன் மெய்யுணர்ச்சியை அடைவான்.

உருவச் சிறுமையைக்கண்டு அவமதித்தல் ஆகாது.

6. கண்ணுக்கு மிக்ககறுப்பா யிருக்குமிள
குண்ணச் சுவைநன் குறைத்திடுமால்—ஒண்ணுதல்சேர்
பெண்ணமுதமன்னாய் பிறங்குமறிவிற் பெரியோர்
வண்ணமுமிற் றென்றேமதி.

(இ-ள்.) மிளகு கண்ணுக்குச் சிறுத்துக் கறுப்பாயிருந்த போதிலும் வாயிலிட்டுச் சுவைக்க மிகவும் உறைப்பாயிருக்கும். அதுபோலவே அறிவிற் சிறந்த பெரியோர்களும் பார்வைக்கு அறிவில்லாதவர்போலத் தோன்றினாலும், உண்மையில் மகாமேன்மையுடைய ராயிருப்பார்கள்.

இதுவுமது.

7. கத்தூரி நோக்கிற் கருத்திருப்பினும் வாசம்
எத்திசையும் வீசியினிதாகும்—முத்தம்
தனையொத்த வெண்ணகையாய் சாற்று மிதுபோலாம்
கனமுற்றார் தங்குணமும் காண்.

(இ-ள்.) கஸ்தூரியானது பார்வைக்குக் கறுப்பாய் விகாரமாயிருந்தாலும், நான்கு திசையும் கமகமவென்று பரிமளிக்கும்; அதுபோலவே மேலானவிவேகிகளின் தன்மையும் ஆகும்.

ஞானியரியல்பு.

8. நீர்பிரித்துப் பாலுண்ணு நேரறிவதம்ஸமலால்
ஓர்பறவைவேறங் குணர்ந்திடுமோ—தார்குழலாய்
தேடரிய வீசனையும் செய்தசிருட்டியையும்
மூடரறி வாரோ மொழி.

(இ-ள்.) நீரைப்பிரித்துப் பாலையுண்ணும் வித்தை அன்னபட்சிக் கல்லாமல் மற்றொன்றுக்குத் தெரியுமோ தெரியாதல்லவா, அதுபோலவே கர்த்தாவாகிய ஈசனையும் காரியமாகிய பிரபஞ்சத்தையும் ஞானிகள் வவேகித்தறிவார்களேயன்றி, அஞ்ஞானிகள் அறியமாட்டார்கள்.

யோகி உடலைக்குறித்து வருந்த மாட்டான்.

9. ஆறுகட ந்தப்பாலடை ந்தார்க்குத் தாமுன்னம்
ஏறுபட கென்னாகி லென்னாமே—மாறினலாய்
உன்னரிய பேரின்பத் துற்றவொரு யோகிக்குத்
தன்னுடலா லென்கவலை தான்.

(இ-ள்.) ஆற்றைக்கடந்து மறுகரையிற் சேர்ந்தவர்களுக்குத் தாமேறிச்சென்ற படகுபின்பு எப்படிப் போனால்தான் என்ன விசாரம். அதுபோல நினைத்தற்கரிய பேரானந்தத்தை யடைந்த யோகிக்கு அதனை யடைதற்குச் சாதகமாயிருந்ததேகம் பின்பு எப்படியானால் தானென்ன. அதைப்பற்றி என்னவிசாரம்.

மனக்குற்றம் நீங்கின் பிரமஞானம் உண்டாகும்.

10. மாசகன்றே யுள்ளத்து மாண்புற் றூலல்லாமல்
ஈசனுருவார்க்கு மிலங்காதே—பாசிழையாய்
காமாதியாறும் கடிந்தவுடன் மெஞ்ஞானம்
ஆமேநம் கையினகம்,

(இ-ள்.) மனக்குற்றங்கள் நீங்கினுலல்லாமல் ஈசனைத்தரிசிக்கமுடியாது. காம முதலான ஆறு குற்றங்களும் நீங்கின் உடனே பிரமஞானம் உள்ளங்கை நெல்லிக்கனிபோலச் சித்திக்கும்.

ஆசை நீங்கின் முத்தி உண்டாகும்.

11. ஆசைக் கயிற்றை யறுத்தெறிந்தாலல்லாமல்
பேசுற்றமுத்தி பெறலரிதே— ஆசைதனக்
காளானர் மாள்வாரகத்திரைக் காசைப்பட்டு
மாளுமெலி போலேமதி.

(இ-ள்) ஆசாபந்தத்தை நீக்கினுலல்லாமல் ஒருவர்க்கு முத்தியடைய வொண்ணுது. எவர்கள் ஆசையால் கட்டுண்டிருக்கிறுர்களோ அவர்கள் கூட்டில்வைத்த இரைக்கு ஆசைப்பட்டு மடிகின்ற எலிபோல மடிவார்கள்.

சிறியோர் எங்குபோனுலும் பெருமையடையார்.

12. கொங்கணம் போனுலும் நாய் கோளரியாமோ காசி
அங்கணையப் பன்றி கரியாகுமோ—நங்காய்வண்
சிந்தை நலனில்லாச் சிறியார்தாமெங்குறினும்
அந்தணராகா ரென்றறி.

(இ-ள்) கொங்கண தேசம்சென்றுலும் நாய், நாய் தான் சிங்கமாகமாட்டாது. காசிக்குப்போனுலும் பன்றி, பன்றி தான் யானையாகமாட்டாது. அதுபோல கெட்ட புத்தியுள்ள கீழ்மக்கள் எங்குசென்றுலும் மேன்மக்களாக மாட்டார்கள்.

இறத்தலைக் குறித்துவிசனித்தல் அறிவீனம்.

13. மாண்டாரே மாண்டாரே யென்றுமனத்தயர்வுற்
றுண்டாண்டு தோறுமலப்பார்—பூண்டயங்கும்
கோற்றெடியே யுண்டோகொல் கூற்றின்கொடும் பந்தம்
மாற்றமி லான்மாவுக்கு மற்று.

(இ-ள்) இறந்துபோனவர்களைக் குறித்து மெய்யுணர்வில்லாமல் இடைவிடாமல் வருந்துவார்கள். இறந்துபோனவர் யாவர்? அழியாப்பொருளாகிய ஆன்மாவுக்கு மரணமுண்டோ? இல்லையே.

எவர் யாதுதீங்கு செய்யினும் பொறுத்திருப்பவனேயோகி.

14. வைதிடினுந்தன்னை வருத்திடினு மாறென்று
செய்கலனுச் சும்மா இருந்திடுவான்—வையமிசை
ஆனுனே தூயபரமான்மாவவன் பெருமை
தானுர்க்குச் செப்பத்தரம்.

(இ-ள்) எவனெருவன் பிறர்தம்மை வைதாலும் வருத்தப்படுத்தினுலும் பிரதிசெய்ய எண்ணுமல் பொறுத்திருக்கின்றுனே அவனே பரமாத்மாவாவான். அவன் பெருமையை விவரிக்க யாரால் முடியும்?

சஞ்சலமில்லாமையே இன்பம்.

15. காற்றணையாத் தீபம்போற் கர்ச்சித்தெழுந்திரையின்
தோற்றமிலாத் தோயக்கடல்போலச்—சாற்றும்
மனத்துளக்கம் நீங்கி வதிவதே யின்பம்
தனக்கிணையில் முத்தியுமாம் தான்.

(இ-ள்) அவாத தீபம்போலவும், அலையடங்கிய கடல்போலவும் மனேசஞ்சலம் நீங்கி நிச்சலமாயிருப்பதே இன்பம். முத்தியென்பதும் அதுதான்.

பழக்கத்தால் எந்தச்செயலும் எளிதாகும்.

16. ஒன்றியுரையாடிவர உள்ளத்தன் போங்கிடுமால்
தின்றுவர வேம்பதுவும் தித்திக்கும்—என்றும்,

பழகுதலாலேச் செயலும் பாரிலெளிதாகும்
மழை மதர்க்கண் மங்காய் மதி.

(இ-ள்) ஒருவரோடு அடிக்கடி பேசிப்பழகிவர சிநேகம் விருத்தியாகும். தினந்தோறும் சியத மாகத்தின்றுவர வேம்புகூடத் தித்திப்பாகத் தோற்றும். அதுபோலவே அப்பியாசத்தினுலே எவ்வளவோ கஷ்டமான காரியங்கள் கூடச்சுலபமாகும்.

லோபியர் செல்வம் எவ்வாறுமெனல்.

17. உண்ணூரே தாமும் உதவார் பிறர்க்கொன்றும்
கண்ணாகக்கைப் பொருளைக் காத்திடுவார்—எண்ணுங்கால்
கூட்டுந்தேனெல்லாம் குறவர் பறிகொள்ள
ஈட்டுந்தேனீப்போல் வாரிங்கு.

(இ-ள்) உலோபிகள் தாமும் அனுபவியாமல், பிறருக்கும் கொடாமல் சம்பாதித்த பொருள்களைக் கண்களைக் காப்பது போலவெகு பத்திரமாகக் காப்பாற்ற, அப்பொருளைக் கடைசியில் கள்வர் முதலானோர் அபகரித்துக் கொள்வார்கள். எப்படியென்னில் தாம் கூட்டிவைத்த தேனைத்தாமுண்ணுமல் மலைக்குறவர் கள் கொள்ளை கொள்ளக்கொடுக்கும் தேனீக்களைப்போல என்றபடி.

உதாரிகளின் செல்வம் எவ்வாறுமெனல்.

18. குறையாது நீடும் கொடைவல்லார் செல்வம்
இறையுமவர்க் கெய்தாதாலின்மை—மறிவிழியாய்
மொண்டெடுக்குந் தோறும் முடியாமணற்கேணி
மண்டு புனலூறும் மதி.

(இ-ள்) கொடுப்பவர்களின் செல்வமானது கொடுக்கக் கொடுக்கச் சிறிதும் குறையாமல் வர்த் திக்கும். ஆதலால் அவர்களுக்கு தரித்திரம் என்பது உண்டாகாது. எதுபோலென்னில் மணற்கேணி யின் நீரானது இறைக்க அதிகமாக ஊறும் தன்மைபோல என்றபடி.

கீழ்மக்கள்மனம் எவ்விதத்தாலும் இரங்காது.

19. பேதமற்ற கல்லைப் பிதிர்த்துத் தகர்த்திடலாம்
பூதரத்தைத் தூளாய்ப் பொடித்திடலாம்—ஓதும்
அருள்மறுத்த வெய்ய ரகங்குழைக்கு மார்க்கம்
ஒருவிதத்து மில்லையுணர்.

(இ-ள்) உடைத்தற்கரிய கருங்கல்லையும் முயற்சியினுல் உடைத்துத் தகர்த்து விடலாகும். மலையையும் தூளாய்ப்பொடித்து விடலாம். ஆயினும் கிருபையில்லாத வஞ்சகர்களுடைய கடினசித் தத்தை இளகச்செய்யும் உபாயம் மாத்திரம் இல்லை.

அருள்வலியில்லையாயின் மற்றவலத்தினுல் பயனில்லை.

20. எழிலும் இளமையுமற் றின்புடனே கண்டு
கொழுநனுகவானேற் கொன்னே—கழிவதுபோல்
ஆனபரன்றாய அருளொன்றிலையாகில்
மானவருக் கென்னும்வலி.

(இ-ள்) ஒரு பெண்ணினது அழகையும் இளமையையும் கண்டு கணவன் சந்துஷ்டியடையா விடின் அவை நிஷ்பலமாகக் கழிவதுபோல பரமேச்வரன் அருளைப் பெருதாருக்கு அவர் பெற்றிருக்கும் மற்ற பலங்கள் ஒன்றும் பிரயோசனப்படமாட்டாது.

செல்வம் மனிதர்க்குக் கேடுதியாகும்.

21. செல்வம் பெருகப்பெருகும் செழித்தாசை
சொல்லுமனத் தாசையினுற் றுர்க்குணமாம்—செல்வமது
குன்றக் குறைந்திடுமாலாசை குறைந்திடவே
நன்றில் குணம்தானும் கெடும்.

(இ-ள்) செல்வமானது ஒருவர்க்கு வர்த்திக்க வர்த்திக்க மேன்மேலும் பொருளாசை வர்த்திக் கும்; அவ்வாசையினுலே அநேக துர்க்குணங்கள் உண்டாகும். அன்றிச் செல்வம் குறைதலினுலே ஆசை யும் குறைந்துபோம். ஆசை குறைதலினுலே தீக்குணங்களும்கெடும்.

## CHARACTER SKETCH : THE STORY OF PROCOVIA.

## பராஸ்கோவியாவின் சரித்திரம். குணவலி விளக்கம்:

---

(57-வது பக்கத் தொடர்ச்சி.)

இவ்வாறு பிரயாணஞ் செய்யுங்காலையில் ப்ராஸ்கோவியாவுக்கு ஒருதடவை பெருந்திகில் ஒன்று உண்டாகியது. ஒரு கிராமத்தில் அவள் வீடு வீடாய்த்திரிந்தும் ஒருவரேனும் இராத்தங்க இடம் கொடுக்கமாட்டோமென்று விட்டார்கள். அப்போது, ஒரு கிழவன் முதலில் வெகு கடுமையாய் அவளைக்கிட்ட வொட்டாமல் துரத்திவிட்டவன் பின்பு அவளை வலியவந்து அழைத்தனன். அவளுக்கு அவன் முகமும் பார்வையும் பிடிக்கவேயில்லை. ஆயினும் என்ன செய்வாள்? அவளுக்கு வேறே கதியில்லை. ஆதலால் அவனுடன் அவள் வீட்டுக்குச் சென்றனள். அங்கு அவன் மனைவி அவனிலும் பார்வைக்குக் கொடியவள் போலிருந்தாள். அவள் உள்ளே நுழைந்ததும் அக்கிழவன் வாசற்கதவை அடைத்துத் தாழ்ப்பாள் போட்டுவிட்டான். அங்கு அவர்கள் நுழைந்த அவ்வொரு அறை தவிர வேறே இடமில்லை. அதில் விளக்குக்கூட இல்லை. சிறு குச்சிகளைச் சூழ்ந்துபோலக் கட்டிக் கொளுத்திச் சுவர்வங்கில் நொழுந்தியிருந்த சுள்ளி வெளிச்சமன்றி வேறில்லை. அவ் வெளிச்சத்தில் சுற்றுமுற்றும்பார்த்த போது ப்ராஸ்கோவியாவுக்கு அவ்விரு கிழங்களும் தன்னைப் பயங்கரமாக உற்றுப்பார்த்துக்கொண்டிருப்பதுபோலத் தோன்றியது.

பின்பு அவர்கள் அவளை நோக்கி "நீ எங்கிருந்து வருகிறாய்?" என்றனர். அதற்கவள்: "நான் இஸ்கிமிலிருந்து வருகிறேன். பீடர்புரிக்குப் போகிறேன்" என்றாள். "ஆனால் உன்னிடத்தில் வழிச்செலவுக்கு வேண்டியபணம் இருக்கவேண்டுமே" என்றார்கள். "இல்லை, அரை ரூபாய்க்குள்ளே தான் இருக்கிறதென்றாள்" அப்போது கிழவி "சுத்தப்பொய், பணமில்லாமல் அத்தனைதூரம் ஒருவரும் போகமாட்டார்கள்" என்றாள். அவள் தன்னிடத்தில் அதற்குமேல் இல்லையென்று என்ன சொல்லியும் அவர்கள் நம்பாமையினாலே அவளுக்குக் கோபமும் பயமும் பொறுக்கமுடியாமல் கண்ணீர்விட்டு அழாதவண்ணம் வருந்தினாள்.

கடைசியில் அவர்கள் கொஞ்சம் உருளைக் கிழங்குகள் சாப்பிடக்கொடுத்து கணப்போரமாக ஓர் திட்டாணியில் படுத்துக்கொள்ளச் சொன்னார்கள். தன் பணத்தை வேண்டுமானால் எடுத்துக்கொண்டு தன்னை கொல்லவினையாமலிருக்கட்டும் என்று கருதி தன் மேற் போர்வையையும் மூட்டையையும் தனியே எடுத்து வைத்துவிட்டுக் கடவுளை உட்கனிந்து பிரார்த்தித்துப் படுத்துக்கொண்டாள். அவள் தூங்குகிறாளென்று அவர்களுக்குத் தோன்றியதும் அவர்கள் குசு குசுவென்று பேசத் தொடங்கினார்கள். கிழவன், "இவளிடத்தில் அவசியம் பணமிருக்கவேண்டும். நோட்டாக மாற்றி வைத்துக்கொண்டிருக்கிறாள் சந்தேகமில்லை" என்றான். கிழவி, "அவள் கழுத்தில் கயிறொன்று கட்டியிருக்கக் கண்டேன். அதில் சிறு பையொன்று கட்டித் தொங்கவிட்டிருந்தது, பணம் அதில்தான் இருக்கவேண்டும்," என்றாள். பின்பு முன்னிலும் மெதுவாக ஏதோ பேசிக்கொண்டு "இவள் இங்கே வருவதை ஒருவரும் பார்க்கவில்லை, இவள் ஊரில் இருக்கிற சங்கதியே ஒருவருக்கும் தெரியாது," என்றார்கள். அதன் பின் அக்கிழவி திட்டாணிமீது ஏறி வருவதைப் பயத்தால் நடுங்கிக்கொண்டிருக்கும் அப்பெண் கண்டு "மறுபடியும் என்னை ஏன் உபத்திரவிக்கிறாய்? என்னிடத்தில் பணமில்லை! என்னைக் கொன்றுவிடாதே:" என்று வேண்டிக்கொள்ளவும் அக்கிழவி அதற்கொன்றும் பதில் பேசாமல், அவள் கழுத்திலிருந்த

பையைப் பிடித்திழுத்து அவள் புடவை யெங்கும் தொட்டுத் தொட்டுப்பார்த்து அவள் கால் சப்பாத்தையும் பிடுங்கிப்பார்த்து கைகளையும் திறந்து பார்த்து ஓரிடம் பாக்கியில்லாமல் கேசாதிபாதம் பரிசோதித்தாள். கடைசியில் பையில் அநுமதி பத்திரத்தைத் தவிர வேறொன்றுமில்லாமையால் அவளை அவள் பாட்டில் விட்டு விட்டுத் தாங்களும் படுத்துக் கொண்டார்கள். ப்ராஸ்கோவியா சிறிது நேரம் உடம்பு இலை இலையாய்ப்பறக்க நடுங்கிக்கொண்டிருந்து, பின்பு அவர்கள் விடும் மூச்சினால் அவர்களிருவரும் நித்திரை செய்கின்றார்களென்றறிந்து தானும் தூங்கத் தொடங்கினாள். பொழுது விடிந்து அக்கிழவி தன்னை எழுப்பும் வரையில் எழுந்திருக்கவில்லை. காலையில் அவ்விருவரும் இராத்திரியிலும் அதிக விசுவாசமாகப் பேசி அவள் வரலாற்றை விசாரித்து அவளுக்கு வேண்டிய உணவுகளைக் கொடுத்து உபசரித்துத் தாங்கள் இராத்திரியில் அவளை அவ்வாறு பரிசோதித்ததற்குக் காரணம் அவள் ஒருவேளை திருட்டு நடக்கையுள்ள பிசகு காரியோ என்னும் சந்தேகத்தினால் செய்ததன்றித் தங்களுக்கு அவள் ஸொத்தை அபகரிக்கவேண்டும் என்னும் எண்ணம் சற்றும் இல்லை என்று வற்புறுத்தினார்கள். ப்ராஸ்கோவியா அவ்வீட்டில் க்ஷணப்பொழுதேனும் இருக்க இஷ்டமில்லாமல் உடனே புறப்பட்டு பிரயாணமாயினாள்.

அவள் தன் பணப்பையைத் திறந்து பார்த்ததும் அதில் இன்னம் அரை ரூபாய்க்காசு அதிகம் இருந்தபோதிலும் அவர்கள் தன்னைக் கொல்ல உத்தேசித்தார்களென்பதே அவளுடைய முழுநம்பிக்கை. ஆதலின், அந்தக் கொடிய ஆபத்திலிருந்து தன்னைக் காப்பாற்றினதற்காகக் கடவுளைக் கொண்டாடினாள்.

பின்னொரு தடவை அவளுக்கு இன்னொரு பயமுண்டாகியது. அவள் ஒருநாள் காலையில் ஒரு கிராமத்தைவிட்டுப் புறப்பட்டுப் பிரயாணமானதும் அவ்வூர் நாய்கள் எல்லாமாய்ச் சேர்ந்துகொண்டு அவளைத் தொடர்ந்து வெள் வெள்ளென்று குரைத்து அவள்மேல் விழுந்து கடிக்கவந்தன. கையில் இருந்த தடிக்கொம்பால் அடித்துத் தப்பிக்கொள்ள ஓடவும் அவைகள் முன்னிலும் பயங்கரமாய்க் குரைத்துக்கொண்டு அவளைத் துரத்தின. ஒரு நாய் அவள் துணியைக் கவ்வி இழுக்கவும் அவள் குப்பிரிக்கக் கீழே விழுந்து இனி நாம் பிழைக்கப்போகிறதில்லை என்று எண்ணிவிட்டாள். அவ்வேளையில் அவ்வழியாய்ப் போன குடியானவன் ஒருவன் அந்நாய்களைத் துரத்தியடித்து அவளைக் காப்பாற்றினான். நல்ல வேளையாய் நாய்கள் அவளைத் துரத்தினவேயன்றிக் கடிக்கவில்லை.

அதற்குள்ளாகப் பனிக்காலம் வரத்தலைப்பட்டு எட்டுநாள் அகோராத்திரம் இடைவிடாமல் பெய்த பனியினால் அவள் முன்னேக்கிச் செல்லமாட்டாமல் ஓர் கிராமத்தில் தங்கிவிட வேண்டியதாயிற்று. பனிவிட்டதும் அவள் பிரயாணமாகப் புறப்பட அவ்வூரார், அக்கொடிய பனிக்காலத்தில் கால்நடையாக ஒண்டியாய்ப் பனிமேல் நடந்து செல்வது மகா பலசாலிகளான ஆண்பிள்ளைகளுக்கும் கூடப் பிராணஹானியாகும் என்றும், காற்றால் பனிநாற்புறமும் சிதறியடிக்கப்பட்டு வழிதுறை தெரியாமல் மறைத்துவிடும் என்றும் சொல்லி கிருஸ்த்மஸ் பண்டிகைக்காக ஏகாதருணன்புரி என்னும் பட்டணத்திற்குத் தானியம் முதலிய ஸாமான்களைக் கொண்டு செல்லும் வண்டிகள் வருகிற வரையில் அவளை அங்கு தானே நிறுத்திக்கொண்டார்கள். வண்டிக்காரர்கள் அவள் வரலாற்றைக் கேட்டுத் தங்கள் வண்டியில் அவளை ஏற்றிக்கொள்ள உடன்பட்டாராயினும், அவள் உடை பனிக்காலத்தில் பிரயாணம் செய்யத்தக்கதாய் இராமையினால் அவளை ஸாமான் கட்டியிருந்த கம்பளி யொன்றினால் போர்த்தியும் கூட

நாலாநாள் ஒரு ஜாகையில் வந்து சேர்ந்த போது கடுங்குளிரினால் அவள் கன்னம் வெடித்துப் போயிருக்கக் கண்டார்கள். அவ் வண்டிக்காரர்கள் அதற்கு ஏதோ சிகிஸ்சை பண்ணித் தங்களாற் கூடின ஜாக்கிரதை எடுத்துக்கொண்டார்களாயினும் அவளுக்கு ஆட்டுத்தோல் போர்வை யொன்று இல்லாத பக்ஷத்தில் குளிரினால் அவள் விறைத்துப் பிழைக்கமாட்டாள். ஆதலால் அவளைக் கூட்டிக்கொண்டுபோதல் அஸாத்தியம் என்று சொன்னார்கள். அவ்வளவு நல்ல துணையை இழக்கவேண்டி வருகிறதேயென்று ப்ராஸ்கோவியா மிகவும் வருந்தினாள். அச்சாகையில் இருந்த ஜனங்களோ அவளைத் தங்களிடத்தில் வைத்துவிட்டுப்போக ஸம்மதியோ மென்றார்கள். பின்பு வண்டிக்காரர்கள் தாங்கள் சந்தா செய்து ஒரு ஆட்டுத்தோற்போர்வை வாங்கிக்கொடுப்பதாக ஒப்புக்கொண்டார்களாயினும், அச்சாகையில் இருந்தவர்கள் தங்கள் போர்வையைக் கொடுத்துவிட்டால் தங்களுக்கு வேறொன்று எளிதில் ஸம்பாதிக்க முடியாதாதலின் விற்பனைக்குக் கொடுக்க மாட்டோம் என்று விட்டார்கள். அச்சத்திரத்தில் இருந்த வேலைக்காரியின் போர்வைக்கு அதன் கிரயத்தின் இரண்டு பங்கு கொடுப்பதாகச் சொல்லியும் அவள் உடன்படவில்லை. கடைசியில் ஒரு உபாயம் செய்யப்பட்டது. அவ்வண்டிக்காரர்களில் ஒருவன் "இப்பெண்பிள்ளை என்னுடைய போர்வையை போர்த்துக்கொள்ளட்டும் நாம் மயிலுக்கு ஒரு தரம் நம்முடைய போர்வைகளை ஒருவர்க்கொருவர் மாற்றிக்கொள்ளுவோம்,'' என்று சொல்ல, அவர்கள் எல்லோரும் சரியென்று அதற்குடன்பட்டார்கள். ப்ராஸ்கோவியா ஒருவன் போர்வையைப் போர்த்துக்கொள்ள அவன் ஸாமான் கட்டின படுதாவொன்றைத் தன்மேலிட்டுப் போர்த்துக்கொண்டு குறலெடுத்து உரக்கப் பாடினான். ஒவ்வொரு மயில் கல்லுக்கும் தம் போர்வைகளை வண்டிக்காரர்கள் மாற்றிக்கொள்ள அது அவர்களுக்கு வெகு வேடிக்கையாயிருந்தது. ப்ராஸ்கோவியாவோ தனக்காக அவ்வளவு உதவி செய்த வண்டிக்காரர்களுக்கு யாதும் குளிரினால் அசௌக்கியம் உண்டாகாமல் இருக்கும்படிக் கருணை செய்யக் கடவுளை வழிநெடுகத் தன் மனசுக்குள்ளே பிரார்த்தித்துக் கொண்டே சென்றாள்.

ஏகதருணன்புரியில் அவர்கள் தங்கின சத்திரத்தில் ஒருவள் அவ்வூரில் உள்ள உதார குணமுள்ளவர்களின் பெயர்களை ப்ராஸ்கோவியாவுக்குச் சொல்லி அவர்களில் மிலின் என்னும் ஒரு துரைமகளைப் பற்றி விசேஷமாகச் சிலாகித்துச் சொல்ல, ப்ராஸ்கோவியா தான் மேலால் பிரயாணம் செய்யவேண்டும் விதத்தைப்பற்றி அவரது ஆலோசனையை மறுநாள் அவரிடத்திற் சென்று கேட்போமென்று நிச்சயித்துக் கொண்டாள். அத்தினம் ஞாயிற்றுக்கிழமையானதினால் முதலில் கோயிலுக்குப் பிரார்த்தனை பண்ணிவருவோமென்று செல்ல, அங்கு அவளுடைய வழி நடந்த உடையையும் அன்புமேலிட்டால் அவள் செய்த வந்தனையையும் கண்டு அவளை ஜனங்கள் கவனித்து நோக்கலாயினர். அவள் கோயிலைவிட்டு வெளியில் வந்ததும் ஒரு துரைமகள் அவளை யாரென்று விசாரித்தனள். ப்ராஸ்கோவியா தன் பெயரைச் சொல்லி மிலின் பெருமாட்டியின் உதாரகுணத்தைப்பற்றி எங்கும் சொல்லிக்கொள்ளுதலினால் அப்பெருமாட்டியை எவ்விடத்தில் காணலாகும் என்று கேட்டனள். அதற்கு அப்பெருமாட்டி "இந்த மிலின் துரைமகளின் நன்மையைப்பற்றி ஜனங்கள் பெருமிதமாகப் புகழ்வதேயன்றி வாஸ்தவத்தில் அவள் அவ்வளவு தர்மசிந்தையுள்ளவளென்று நான் எண்ணவில்லை. அது கிடக்கிறது, என்னுடன் வா. நான் உனக்கு வேண்டிய உதவிகளைச் செய்கிறேன்.'' என்றாள்.

ப்ராஸ்கோவியாவுக்கு இப்படிச் சொன்னது அவ்வளவு இஷ்டமாயிருக்கவில்லை. ஆயினும் அத்துரை மகள் மிலின் பெருமாட்டியின்

வீட்டைக் காட்டி, "உனக்கு வேண்டிய உதவி இங்கு கிடையாவிடின் நீ என்னிடத்தில் வர வேண்டும்," என்று சொல்லி அனுப்பினுள். ப்ராஸ்கோவியா அதற்கொன்றும் மறுமொழி சொல்லாமல் வேலைக்காரர்களைப் பார்த்து "மிலின் பெருமாட்டி வீட்டில் இருக்கிறாரா"? என்று கேட்டாள் அவர்கள் இதென்ன ஆச்சரியம்! என்று தங்கள் யெஜமானியைப் பார்த்தபொழுது தான், தான் அதுவரையில் பேசிக்கொண்டிருந்தவர் தாம் மிலின் பெருமாட்டி என்று ப்ராஸ்கோவியாவுக்குத் தெரிந்தது.

இந்த நல்ல பெருமாட்டி பனிக்காலம் முழுதும் ப்ராஸ்கோவியாவைத் தம் வீட்டிலேயே வைத்து ஆதரித்து அவளுக்கு முன் சொன்னபடி ஒருநாள் இராத்திரி மழையில் நனைந்ததனுல் உண்டாகிய ஜலதோஷத்தினுல் உடம்புக்கு வந்த கெடுதிகளைத் தக்க ஔஷதங்களைக் கொடுத்து நிவர்த்திக்கும்படி வெகு பிரயாசைப்பட்டார். அன்றியும் ப்ராஸ்கோவியாவுக்கு அவள் நிலைமைக்குரிய அநேக படிப்பு விஷயங்களையும் கற்பித்தாள். ப்ராஸ்கோவியாவின் தந்தை தாயார்கள் தம் மகளுக்கு அவரது முன்னிலைமையை ஞாபக மூட்டும்படியான விஷயங்களைப் போதிக்கப் பயந்திருந்தார்களோ அல்லது அந்தச் சிரமத்தை எடுத்துக் கொள்ளப் போதுமான மனவெழுச்சி இல்லாமையினுலோ ப்ராஸ்கோவியாவுக்கு எழுதப் படிக்கக்கூடத் தெரியாமலிருந்து இப்பொழுது கற்றுக்கொள்ள வேண்டியதாயிருந்தது. மிலின் பெருமாட்டி தனக்குச் செய்த உதவிகளைச் சொல்லப் புகுந்தால் அவளுக்கு உடனே கண்ணீர் பெருகும்; தான் இப்போது அநுபவித்திருந்த சுகத்தை யெண்ணித் தன் பெற்ரோர்கள் பனிக்காட்டில் அநேக கஷ்டங்களுக்குட்பட்டு வருந்தி வருவதையும் எண்ண அவளுக்குத் துயரம் முன்னினும் அதிகமானதேயன்றி வேறில்லை. ஆயினும் மிலின் பெருமாட்டி பனிக்காலமெல்லாம் சென்று இளவேனில் வரும் வரையில் அவ்வூரை விட்டுப்போக ஒப்பினரில்லை. பின்பு வல்கா நதியின் உபநதியாகிய காமா நதியில் செல்லும் ஒரு ஓடத்தில் அவளுக்கு இடம் அமர்த்திக் கொடுத்து நிஷ்ணிநவகரோட் பட்டணத்துக்கு இரும்பும் உப்பும் ஏற்றிக்கொண்டுபோகும் ஒரு வர்த்தகன் கையில் ஒப்பித்து அவளை அனுப்பினர்.

SHORT STORY.

## RESOURCEFUL MEN.

### உபாயஸ்தர்கள்.

(சிறுகதை.)

ஓரூரில் ஒரு கோமுட்டி இருந்தான். ஒரு நாள் இராத்திரி ஒரு திருடன் அவன் வீட்டுப் பரணையின்மேல் ஒளித்துக் கொண்டிருந்தான். அவ்வீட்டில் செட்டி படுத்துக்கொள்ளப் போனுன் அப்போது அங்கு திருடன் இருக்கிற அரவம் கண்டு செட்டி ஓர் உபாயம் செய்தான். அதாவது தன் பெட்டிகள் எல்லாம் பூட்டியிருக்கின்றனவா வென்று பார்ப்பது போல் தொட்டு தொட்டு பார்த்தான் உடனே உண்மையாய் தேள் கொட்டினவனைப்போல் ஐயையோ கையில் தேள் கொட்டி விட்டதே என்று உரக்கக்கூவி அழுதான். அவன் அழுகிற குரலைக்கேட்டு அயல் வீட்டுக்காரரெல்லாம் ஓடிவந்து பார்த்து மந்திரித்து விஷமிரங்கிற்ருவென்ருர்கள். அதற்கு செட்டி விஷமிறங்கிற்று அந்த புண்ணியவான் மாத்திரம் இன்னும் பரணையைவிட்டு இறங்கவில்லையே யென்று பரணையிலிருக்கிறவனை அவர்களுக்குக் காட்டினுன், உடனே அவர்கள் திருடனைப் பிடித்துக்கொண்டு கோமுட்டியின் உபாயத்தை மெச்சினர்கள். அடுத்த வீட்டில் அவனுடைய தம்பி ஒருவன் இருந்தான். அவனுக்கு ஆப்தனை சிநேகிதனொருவன் ஒருநாள் இராத்திரி தன் வீட்டிற்கு வந்தபோது செட்டி தன் காசுப்பையை கொட்டி எண்ணிக்கொண்டிருக்கையில் விளக்கு நின்றுவிட்டது. உடனே சிநேகிதன் பணத்தை எடுத்துக்கொள்ளப் போகிருனென்று கோமுட்டி சந்தேகித்து ஓர் உபாயம் செய்தான். அதாவது தன் சிநேகிதன் கைகளிரண்டையும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு நான் ஒருவாக்கு கேட்கிறேன், அதென்னவென்ருல்: இதுவரையில் நீ என்னிடத்தில் அதிக விசுவாசமுடையவனுகவிருந்ததுபோல் உன் ஆயுசுவரையில் இருக்கிறதாக இதோ தீபம் வருகிறது அத்தீபமறியக் கைபோட்டுக் கொடென்று தன் பெண்சாதியை சீக்கிரம் தீபம் கொண்டுவரச் சொல்லி தீபம் வருகிறவரையில் கைகளை விடாமல் கெட்டியாய் பிடித்திருந்து தீபம் வந்தவுடனே அதறியக் கைபோட்டுக் கொடென்று கைகளை விட்டுவிட்டான்.

## LESSONS IN NATURE STUDY.
## பிரகிருதி வித்யாம்சம்.
## HOW PLANTS FEED.
## பயிர்கள் எப்படி வளருகின்றன.

உலகத்தில் எல்லாத் தேசங்களைவிட இந்தியாவில் பயிர்செய்வோர் அதிகமென்றேயெண்ணுகிறோம். ஆனால் அவர்களில் எவ்வளவு பேர் பயிர் வளர்ச்சியின் முறைகளைப்பற்றி யோசிக்கிறார்கள் என்பதை நினைக்க நமக்கு ஆச்சரியம் உண்டாகிறது.

எந்தச் செடியையாவது நாம் ரசாயன சாஸ்திரவழியாகப் பிரித்துப்பார்த்தால் அது ஏறக்குறையப் பதினைந்து முதற்பொருள்கள் அல்லது மூலவஸ்துக்கள் (Elements) பல வேறளவினவாகச்சேர்ந்து ஆயிருக்கின்றதெனத் தெரியவரும். இப்பதினைந்து பொருள்களில் பத்து எல்லாச் செடிகளிலும் இருப்பதாலும் மேலும் அவை யெல்லாவற்றையும் வேண்டிய அளவிற் பெறுவிடில் எந்தப்பயிரும் சரியாக வளருவதில்லை யாதலாலும் இப்பத்தும் பயிர்களின் முக்கிய ஆதாரமாகக் கருதப்படுகின்றன. அவையாவன: (1) கரி, (2) ஹைட்ரஜன் (Hydrogen), (3) பிராணவாயு, (4) நைட்ரஜன் (Nitrogen,) (5) கந்தகம், (6) பாஸ்பரஸ் (Phosphorus), (7) பொடாசியம், (8) மேக்னீசியம், (9) கால்சியம், (10) இரும்பு என்பவையாம். இவை இன்னும் சில அவ்வளவு முக்கியமில்லாத முதற்பொருள்களோடு வெவ்வேறு விதமாகக்கூடி நமக்குப் பயிர்களிலிருந்து கிடைக்கும்பொருள்களாகின்றன. ஹைட்ரஜன், பிராணவாயு இவை இரண்டும் சேர்ந்து தண்ணீராகின்றது. இத்தண்ணீர்தான் எல்லாச் செடிகளிலுமுள்ள முக்கியமானபொருள். முதல் மூன்றும் சேர்ந்து சர்க்கரை, எண்ணெ, ஸ்டார்ச்சு (Starch) என்பவையாகின்றன. முதலைந்தும் சேர்ந்து விதைகளின் முக்கியபாகமும் தண்டு, இலை, இவைகளின் அணுக்களில் (Cells) நிறைந்துள்ளதுமாகிய 'ப்ரோடோப்ளாஸம்' (Protoplasm) என்னும் ஜீவப்பொருள் ஆகின்றது.

மேற்சொல்லியவற்றில் கரி முதலான சிலவற்றையே ஆகாயத் (air) திலிருந்து செடிகள் பெறுகின்றன.

நைட்ரஜனும் மேலேசொன்ன ஜாப்தாவில் அதின்பின்நிற்பவையும்நிலத்திலிருந்து கிடைக்கின்றன. தொன்றுதொட்டுவரும் பழக்கத்தாலே *செடிகள் உணவுட்கொள்ளுதலுக்கு அழகான ஒருவழி உடைத்தாயிருக்கின்றன. ஆகாயத்திலுள்ள கரிவாயுவானது (ஒருபங்கு கரியும் இரண்டுபங்கு பிராணவாயுவும் சேர்ந்து ஆகும் காற்று) இலைகளின் மெல்லிய தோலின்வழி உள்ளே செல்லுகிறது. அங்கே பச்சை 'க்ளோரபில்' (Chlorophyll) என்னும் வஸ்துவால் அதிலுள்ள கரிமட்டும் எடுத்துக்கொள்ளப்பட்டபின் மீந்த பிராணவாயுவானது பிராணிகளுக்குபயோகப்படும்படி வெளியே வந்துவிடுகின்றது. அப்பிராணவாயு பிராணிகளால் சுவாசிக்கப்பட்டு மறுபடியும் கரிவாயுவாகின்றது. நிலத்திலுள்ள லோக சம்பந்தமான மற்ற உணவுகள் செடிகளின் சிறிய மயிரிலைபோன்ற வேர் நுனிகளால் உட்கொள்ளப்படுகின்றன. ஆனால் அவை சிறுவேர்களின் மெல்லிய தோல்வழியே உட்செல்லுமுன்னர் கரைந்த ஸ்திதியிலிருக்க வேண்டும். வேர்களிலிருந்து ஓர்வகை திராவக (Acid) முள்ள நீர் ஊறுகின்றது. அது சாதாரண தண்ணீரில்கரையாத பலலோக சம்பந்தப் பொருள்களையெல்லாம் தன்னுட் கரைத்துக்கொள்ளக் கூடியதாயிருக்கின்றது. அவ்விதமாக நிலத்திலுள்ள உணவுத்தூள்கள் பக்கத்திலுள்ள வேர்களின் வழியாய் உட்புகுகின்றன. வயற்பயிர்களின் விஷயத்திலோ பயிர்கள் எவ்வளவுதூரம் சன்னமான கிளைவேர்கள் விட்டு உண்டபோதிலும், அந்நிலத்திலுள்ள முக்கிய உணவுகளான பாஸ்பரஸ், பொடாஷ், நைட்ரஜன் என்பவைகள் கொஞ்சம் கொஞ்சமாயிருத்தலால் சீக்கிரம் தீர்ந்துபோகின்றன. நிலம் எவ்வளவு காய்ந்ததாயிருந்தபோதிலும்

* By the development of ages.

அதில் செடிகள் வளரவேண்டுமானுல் மிகுதியாக நீரிருத்தல்வேண்டும். ஏனென்றால் செடிகள் சூரிய வெளிச்சத்தில் வளர்ந்து வரும்போது எப்பொழுதும் தம் வேர் வழியாய் தண்ணீரையிழுத்து அதைத்தண்டிலே மேற்செல்லவிட்டு பின் அத்தண்ணீரி லிருக்கும் உணவுமுற்றும் தம்முட்கொண்டபிறகு அந்நீரை இலைகளின் வழியாய் ஆவிரூபமாக வெளிவிடுகின்றது. இவ்வாறு அடிக்கடி வேர்கள் தண்ணீரை யுறிஞ்சுதலால் நிலத்திலிருக்கும் தண்ணீர் ஓடுவதற்குக் காரணமாகிறது. அந்த ஓட்டத்தினுல் நிலத்திலுள்ள தண்ணீரிற் கரையக்கூடிய செடியுணவுகள் கரைந்து வேர்களிடம்வர ஏதுவாகிறது.

இயல்பில் ஆகின்ற அழுகுந்தன்மை (கெட்டுப்போகும் தன்மை) யால் நிலத்திலுள்ள லோகசம்பந்தமான பதார்த்தங்கள் நீரிற்கரையக்கூடியனவாகின்றன. மேலும் ஒவ்வொரு நல்ல நிலத்திலும் கணக்கில்லாத அணுப்பிரமாணமான சிறு ஜெந்துக்கள் (Bacteria) இருந்து இம்மாறுதலில் உதவுகின்றன. மேலும் அவைகள் காய்ந்த இலைகள் முதலியவற்றிலுள்ள நைட்ரஜனை வெடியுப்பாக்கி செடிகட்குபயோகமாக்குகின்றன. இவ்வுணவுகள் உட்கொள்ளத்தக்க ஸ்திதியில் கிடைத்தாலன்றி ஏற்றவளர்ச்சியும் விளைவும் உடைய செடிகள் இருப்பதரிது.

நிலத்தில் சீக்கிரம் குறைந்துவிடக்கூடிய பயிருணவுகள் நைட்ரஜன், பாஸ்பரஸ், பொடாஸ் என்பவையே என்று முன்னமே கூறினேம். ஆனுல் இவ்விஷயக்கொள்கை தெரியாத வெகுநாள் முன்னமேயே கிருஷிகர், சாணம், எலும்பு முதலியவை தம் வயல்கட்கு அதிகரித்த விளைவைத் தந்தனவென்று கண்டுபிடித்திருந்தார்கள்.

ஆனுல் இயற்கைச் (Science) சாஸ்திர ஆராய்ச்சியானது, இந்த எருவுகள் ஏன் அந்த விளைவைத்தந்தன என்பதையுணர்த்திய போது மனிதர்கள், இந்த உணவுப்பொருள்களுள் ஒன்றும் பலவும் அதிகமாயும் உடனே பயன்படக்கூடியனவாயும் நிறைந்துள்ள வேறு ரசாயனப்பொருள்களைக் குறைந்த அளவாய் ஏன் எருவாக வுபயோகிக்கக்கூடாதென்று யோசித்தார்கள். பலமுயற்சிகள்செய்து கடைசியில் அது முடிவெய்தி, இப்போது ஐரோப்பா அமெரிக்கா தேசங்களில் கிருஷிக்கு வேண்டிய எருவுகளைச் செய்து கொள்வது, ரசாயன சாஸ்திரத்தொழில்களில் முக்கியமானதாக இருக்கின்றது. கிரேட்பிரிடேன் தீவுகளிலிருந்துமட்டும் வெளிதேசங்களுக்கு ஏற்றுமதியாகிற எருவு 4-லட்சம் டன்னிற்கு மேற்படுகின்றது. இவ்விந்திய நாட்டிலும், ஜனத்தொகை மிக விரைவில் அதிகரித்தலாலும் அதனுல் ஆகாரத் தானியங்கள் அதிகமாக வேண்டப்படுதலாலும் இந்நாட்டுக் கிருஷிகள் ரசாயனமுறைப்படி செய்த எருக்களை அதிகமாக உபயோகித்து, இது விஷயத்தில் தான்யவுற்பத்தி செய்யும் பிறதேசங்களின் கிருஷிமுறைக்குச் சமமாகத்தாம் அனுசரிக்கும் கிருஷிமுறையை விர்த்திசெய்து முன்னுக்குக்கொண்டு வரவேண்டிய அவசியம் நேரிடுமென்பது நிச்சயமாய்த் தோற்றுகிறது.

வங்காள ராஜாங்கத்தார் பரீட்சார்த்தமாக ஏற்படுத்திய விளைநிலங்களில் (Experimental farms) செய்த பரிட்சைகளில் இவ்விதமாக தயார்செய்யப்படும் எருவுகள் மற்ற தேசங்களிற்போலவே இந்நாட்டிலும் பயன்கொடுக்குமென்பதை யறிவித்தன. மேலும் நெல்விளைவானது அவ்வெருவால் இரட்டித்ததென்றும், எருவின் விலையைக்கழித்தபின்னும் அதிகலாபமிருந்ததென்றும் கண்டார்கள். இப்போது இருப்பதைவிட அதிகவிளைச்சலுக்காக அதிக நிலங்களை (நிலங்கள் கிடைத்தாலும்) நூதனமாகப்பயிரிடுவதைவிடக் கிருஷிகளுக்கு எருவால் விளைவை யதிகப்படுத்திக்கொள்வது மிக லாபகரமாக இருக்கின்றது. ஏனென்றால் அதிக நிலங்களை சாகுபடிசெய்தால் அதன் கந்தாயமும், வேலிபோடல், உழுதல் முதலிய செலவுகளும் சேர்ந்துசெலவு மிக அதிகமாகின்றது. ஆனுல் பின் சொல்லியதிலோ எருவிலே தான் கிருஷிகள் செலவுசெய்ய வேண்டியிருக்கின்றது.

இந்தியாவிலே பயிர்வளம் தரும் பொருள்கள் ஏராளமாயிருக்கின்றன. ஆனால் எலும்பு, புண்ணாக்கு, வெடியுப்புமுதலிய எருவுக்குபயோகமான பொருள்கள் (அவற்றின் உபயோகத்தைக்கண்டறிந்த) வேறுதேசங்களுக்கு ஆயிரக்கணக்கானுடன்களாக வருஷா வருஷம் இங்கிருந்து ஏற்றுமதியாகின்றபடியால் இவ்வளந்தரும் வஸ்துக்கள் அற்றுப்போகக்காரணமாகி நிலவளமும் குறைய ஹேதுவாகின்றது. இந்தியாவில் எருவிடுதல், மற்றெல்லாதேசங்களைவிடக் குறைந்த செலவில் ஆகும்.

இராஜாங்கத்தார் இதுவரையிலும் விவசாயத்தை விருத்திசெய்வதற்காக, குளங்கள் வெட்டுவதிலும் இருப்புப்பாதை போடுவதிலும் தங்கள் கவனத்தைச் செலுத்திவந்தார்கள். இந்தவிவசாய விருத்திவிஷயத்தில் இன்னும் செய்யவேண்டியது அதிகமிருக்கின்றது. விளைவையு மதிகரிக்கச்செய்து நிலவளப்பத்தையும் குன்றாதிருக்கச்செய்யும் அந்த மார்க்கத்தையும் நாம் கவனிக்காதிருக்கக்கூடாது.

மழையுங்குறைந்து இருக்கின்ற கொஞ்சம் தண்ணீரால் பாயப்பெற்ற பூமிகளிலிருந்து எவ்வளவு விளையக்கூடுமோ அவ்வளவும் விளையவேண்டிய அக்காலங்களில் எருவிடுதல் மிகப் பயனுள்ளதாயிருக்கின்றது. இதனால் ஜனங்களுக்குப் பொதுவில் உண்டாகும் நன்மை தீமைகளைப்பற்றி விரித்தற்கிடமில்லை. ஆனால் இன்னும் அதிகப்பயன் தரும் விவசாயமுறை கையாளப்பட்டால் அதனால் கிருஷிகள் நாள் முழுதும் கடினவேலை செய்து வருந்துவது குறைந்து, அவர்கள் கஷ்ட ஜீவனமும் கூடிய அளவிற்கு மட்டுப்பட்டு சுகமெய்தும் என்பதற்கு ஐயமில்லை.

சாதாரணமாக இப்போது கிருஷிகள் தம் பெரியோர் நாட்களில் இருந்ததைவிட இப்போது காலங்கெட்டு மழை குன்றியதனாலே தமது நிலங்களின் விளைவுங் குன்றியது என்று நினைக்கிறார்கள். ஆனால் அந்நிலங்கள் அடிக்கடி வெள்ளாமைசெய்வதால் வளப்பங் குறைந்து தகுதியற்றவைகளாகப் போய்விட்டமையே விளைவின் குறைவிற்குப் பெரும்பாலும் காரணமென்பது திண்ணம்.

## LESSONS IN ECONOMICS : DISTRIBUTION OF WEALTH.

## அர்த்த சாஸ்திரம்: தனவிபாகம்.

### 4. தனவிபாகம்.

நாமிதுவரையில் தனம் என்றாலென்னவென்றும், அதையெப்படி யுத்பத்தியாக்குகிறது என்றும் விசாரித்துப்பார்த்தோம். இப்பொழுது இப்படியாகவுண்டாக்கப்பட்ட தனம் எவ்வாறாக அதை உத்பத்திசெய்வதில் வியாபிருதர்களான ஜனங்களுக்கு ஈந்து கொடுக்கப்படவேண்டியது என்று அறிய முயலவேண்டும்.

தனோத்பத்திக்கு வேண்டிய ஸாதனங்கள் மூன்றென்று படித்திருக்கிறோம் இம்மூன்றும் ஒரேமனிதனால் உத்பத்தியில் பிரயோகிக்கப்பட்டிருந்தால் உத்பத்தியாகும் தனம் முழுவதும் அவனுக்கேதான் சேரவேண்டியது. ஆனால் ஒரு ஜனஸங்காதத்தில் ஆகும் தனோத்பத்தியில் உபயுக்தமான ஸாதனங்கள் ஸாமானியமாய் ஒரு மனிதனைச் சேர்ந்தவையல்ல, ஆகையால் தனம் உண்டானதும் அதன் உத்பத்தியில் சம்பந்தப்பட்ட எல்லா ஜனங்களும் திருப்தியடையும்படி விபாகிக்கப்படவேண்டியது. அவர்கள் சரியானபடி திருப்தியடையாவிட்டால் தாங்கள் வேலைக்குக்கொண்டுவரும் ஸாதனங்களைக் கொண்டுவரமாட்டார்கள். ஆகவே வேலை நடக்காது. இவ்வகைத்தான தனவிபாகத்தைப்பற்றிச் சில ஸ்வபாவிகமான விதிகள் ஏற்படலாம். அவைகளைக் கூடிய மட்டும் விசிதமாக அறிந்துகொள்ள முயலுவோம்.

தனோத்பத்தியில் பிரயோகிக்கப்பட்ட க்ஷேத்திரம், உத்யமம், மூலதனம் ஆகிய இம்மூன்று ஸாதனங்களும் அத்யாவசியமானவையாகையால் உத்பத்தியாக்கப்பட்ட தனம் இம்மூன்று ஸாதனங்களுக்குரியவரான ஜனங்க

ளுக்குள் பங்குபோடவேண்டியது. உத்யமம் அல்லது உழைப்புக்கு உரியவனுக்குக் கொடுக்கப்படும் தனத்தின் பாகத்திற்கு நாம் வேதனம் (Wages) என்னும் பெயரைக்கொடுப்போம் க்ஷேத்ரஸாதனத்தையுடையவன் பாகத்திற்கு குத்தகை (Rent) என்பதுவழக்கமாகவருகிற பெயர். மூலதனம் போட்டவனது பாகத்திற்கு விருத்தி (Interest) என்றுபெயர்கொடுப்போம். மேலும் தனோத்பத்தி சரியாக நடக்கவேண்டுமானால் தகுந்தபடி களவுமுதலிய ஈதிபாதைகளில்லாமலிருக்கவேண்டியது அவசியமாகையாலும் அவைகளைப் போக்கடிக்கத் தகுந்த பலமான ராஜாங்கம் வேண்டுமாகையாலும், இராஜாங்கத்தை நடத்தச் செலவுக்கும் ஒரு பாகம் உத்பத்தியாக்கப்பட்ட தனத்திலிருந்து கொடுக்கப்படவேண்டியது. இதற்கு வரி (Taxes) என்றுதான் பெயர் வழங்குவது எல்லாருக்கும் தெரிந்தவிஷயமே. ஆகவே உத்பத்தியாகும் தனம் எல்லாம் இந்நான்கு வழியாகத்தான் செலவாகவேண்டியது. உத்பன்னமானதனம் = வேதனம் + குத்தகை + விருத்தி + வரி. இதுதான் தனவிபாகத்தைக் குறித்த சாசுவதமான ஸம்பந்த தருமம். இதற்கு தனவிபாகஸம்சிலேஷம் (The equation of distribution) என்ற பெயரைக்கொடுப்போம்.

இதற்கு உதாரணமாக இப்போது பலமாகத் துணிகள் செய்யப்படும் ஒரு நூலாபீஸில் பத்துலக்ஷம்கஜம் நீளமுள்ள துணியொன்று செய்யப்பட்டது என்று வைத்துக்கொள்வோம். வாகர் கூறும்படி யெத்தனைவிதமாகவந்ததனம் அதை யுண்டாக்குவதில் உதவினஜனங்களுக்குள் ஈந்து கொடுக்கப்படவேண்டியது என்று வினவுவோம். முதல்முதல் ஆபீஸ் கட்டியிருக்கும் இடத்திற்கு உடையவன் வந்து தனக்கு வேண்டிய வாடகைக்காக சிலவாயிரம் கஜங்களைக் கிழித்துக்கொண்டுபோகிறான். பிறகு ஆபீஸில்நடக்கும் வேலைக்கெல்லாம் காரணமான நீரின் சக்தியையோ நீராவியின் சக்தியையோ உண்டாக்கவாவது சமீபத்திற்குக் கொண்டுவரவாவது ஏற்படுத்தப்பட்ட சிப்பந்தி வகைராக்கள் மற்றும் ஒரு பாகத்தையெடுத்துக்கொள்ளுகிறார்கள். பிறகு கைமுதல் போட்டு வேலையை நடத்திவந்தவன் தன் பங்கிற்கு வெகுமயில் நீளமுள்ள துணியைக் கொண்டுபோவான். இவை போக மீதியுள்ளது ஏறக்குறைய 6-லக்ஷம் கஜமுள்ள துணியிருக்கக்கூடும். இவை இரண்டு பங்காளிகளுக்குள் பிரிக்கப்படவேண்டியது. முதற் பங்காளிகளாக ஒரு பெருங்கும்பல் புறப்படுகிறது. ஆபீஸில் வேலைநடத்திய ஓவர்சியர், குமஸ்தாக்கள், கூலியாட்கள் ஆகிய பல ஆண், பெண் குழந்தைகள் கூடின பலர் வந்து தங்களது பங்கை யபேக்ஷிக்கிறார்கள். ஒவ்வொருவருக்கும் ஒரு சிறுபாகந்தான் கிடைத்தபோதிலும் முடிவில் கொஞ்சம்பாகந்தான் வேலையை நடத்திவைக்கும் எஜமானன் பங்குக்குச்சேருகிறது. வேலை நேர்த்தியாகநடந்து, உத்பத்தியான சாமான் சரியாக விலைப்போனால் எஜமானனுக்கு உண்டென்று லாபம்கிடைக்கும் அப்படியில்லாவிடில் கையிலிருந்துகூட நஷ்டம் வரலாம். இப்படியாக நடக்கும் தனவிபாகத்தைப்பற்றிக் கொஞ்சம் நிதானமாக விசாரித்துப் பார்ப்போம்.

வேலையாட்களின் பாகம் அல்லது **வேதனம்:** இப்போது நாம் வேதனம், வரி, விருத்தியென்று உபயோகிக்கும்வார்த்தைகள் சாமானியமாக வழக்கத்தில் வரும் அருத்தத்தில் உபயோகமாவதில்லை. வேதனம் என்று வேலைக்கு நேராகக் கொடுக்கப்படும் கூலிக்குத் தான் செல்வநூலில் பெயர். ஆனால் சாமானிய உலக வழக்கத்தின்படி வேலைசெய்பவன் வேலைக்கு வேண்டிய கருவிகளைத்தானே வைத்திருக்கிறான். ஆகவே அவன் பெரும் ஆச்வாஸத்தில் (Remuneration) ஒரு பங்கு அந்த ஏனங்

களைத் திட்டமாக வாங்கி வைத்திருக்கவேண்டிய கைமுதலின் உபயோகத்திற்காகக் கொடுக்கப்படும் விருத்தியை (Interest) அடக்கிக் கொண்டிருக்கிறது. ஆகையால் செல்வ நூலின்படி வேதனம் அவன் பெருகிற பாகத்திலிருந்து இப்படிப்பட்ட விருத்தியைக் கழித்த தின்மேல் வரும் பொருளுக்குத்தான் பெயராகும்.

க்ஷேத்திர ஸம்பந்தமான பகுதி அல்லது குத்தகை: பிரகிருதி சக்தியின் உபயோகத்திற்காகக் கொடுக்கப்படுவது இது. ஆகையால் ஒரு க்ஷேத்திரத்திற்கு நாம் குத்தகையொன்று கொடுக்கும் பாகமெல்லாம் குத்தகையாகமாட்டாது. அந்தக்ஷேத்திரத்தின்மேல் கட்டியிருக்கும் கட்டடங்களுக்காகக் கொடுக்கப்படும் பாகம் அந்தவேலையை நடத்துவதில் பிரயோகிக்கப்பட்ட உத்யமம், மூலதனம் முதலியவைகளுக்காகப் பிரித்துவைக்கப்படவேண்டியது.

மூலதனத்தான் பகுதி அல்லது வட்டி: சாமானியமாய் மூலதனத்தான் தானே வேலையையும் நடத்திவருவதால் இவன் பெற்றுக்கொள்ளும் பாகத்தில் ஒருகூறு இவன் செய்யும் மேற்பார்வை முதலிய வேலைக்காகச் சேரவேண்டியது. இவன் கையிலிருந்து போட்ட முதலுக்குமாத்திரம் கிடைக்கும் பணமே வட்டியென்னப்படும். மேலும் இவன் பணம் போட்டு வேலைசெய்ய ஆரம்பித்தபோது வேலை சரியாகநடந்து தான் போட்டபணம் வந்து சேருமோ சேராதோவென்ற சந்தேகம் பலமாயிருக்குமாகையால் இந்த சந்தேகத்தை கவனிக்காமல் வேலையை யாரம்பித்து நடத்திய தைரியத்திற்காகவும் ஒருபாகம் சேரவேண்டியது. இவ்வளவும் சேர்ந்துதான் நாம் சாமானியமாக லாபம் என்றுசொலலும் பாகம் ஆகிறது. இப்படியாக.

லாபம் = மேல் விசாரணைக்குறிய வேதனம், + வட்டி + சந்தேகத்திற்காக வுபசாந்தி.

ஆகவே, முடிவில் ஆராய்ந்து பார்த்தால் விபாகமானது பிரத்யேகமாக ஒவ்வொரு மனிதனையும் பற்றியது. ஒவ்வொருவனும் தன் தன் பகுதிசரியாகக் கிடைக்கவேண்டுமென்று பார்க்கிறதற்கு ஆஸ்பதம் அதிகமாகவிருக்கிறதே ஒழிய பலர்கூடி சங்காதத்தின் ஸாதகாபேக்ஷையாகத் தன்தன் நஷ்டத்தைப் பாராமலிருப்பது அரிது. ஆயினும் பலர் தங்கள் பகுதி சரியாகக் கிடைக்காது என்று கண்டால் ஒருங்குகூடித் தத்தம் காரியசாதனைக்காக சிறுபான்மையோருக்கு நஷ்டம் நேரிடினுமதைப் பாராட்டாமல் நிற்பது ஐரோப்பா தேசத்தில் அடிக்கடி காணப்படும் ஒரு விஷயம். இப்படிச்சேருவதால் தன விபாகமானது சுவபாவிகமாக நடக்காது. சிற்சில விஷயங்களில் ஜனங்களின் ஸ்திதியை யனுசரித்து மாறுபாட்டையடையும். ஆயினும் முடிவில் தனவிபாகத்தின் ஸ்வபாவிகமான விதிகள் தான் நீடித்துநிற்கின்றன. மேலும் இப்படிப்பட்ட விபாகத்தில் சம்பந்தப்பட்ட ஜனங்கள் பலதேசத்திற் பலவாகப் பிரிந்திருக்கிறார்கள். இங்கிலாண்டு தேசத்தில் தனவிபாகம்பெறும் ஜனங்களின்பிரிவு இந்தியாவில் காணப்படாது.

நமது தேசத்தில் ஐரோப்பா கண்டத்தின் பலத்த இராச்சியங்களில் காணும்படியான விசேஷமான யந்திரசாலைகள் பெரும்பான்மையில்லை. யந்திரசாலைகளில் தனமுத்பத்தியாவதில் கூடும் ஜனங்களின் கூட்டத்தின்மாதிரியே வேறு; நம்தேசத்தார் போன்ற கைவேலையில் வியாபிருதர்களான உழைப்பாளிகள் வேலை செய்து தனவிபாகம் பெறும்மாதிரியே வேறுதான். பொதுவாக இங்கே வேலையாள் தன் வனங்களைத்தானே வாங்கி வைத்திருப்பதினால் சில விஷயங்களுக்கு அவனே மூலதனத்தான் (Capitalist) ஆகிறான். மற்றும் வெகுவேலைக்காரர்கள் சேர்ந்து யந்திரங்களில் வேலைநடத்தி வருவதாலும், இங்கே ஒவ்வொருவனும் தன் பாட்டைமாத்திரம் பார்ப்பதினாலும், ஐரோப்பாகண்டத்தில் வேலையாட்களும், மூலதனத்தாரும் ஒருங்குகூடித் தத்தம் லாபநஷ்டங்களைச் சீர்திருத்தச் செய்யும் ஏற்பாடுகள் இங்கே நடப்பதற்கு ஆஸ்பதமில்லை. ஆயினும் தற்காலத்தில் ஐரோப்பா, ஆசியா என்கிற வித்தியாசமே அழிந்துபோகும்படி, ஐரோப்பிய தனோத்பத்தியின் ரீதியே உலகமெங்கும் பரவிவருகிறது. யந்திரங்களும்யந்திரசாலைகளும் ஆயிரக்கணக்காக உலகெங்கும் வியாபிக்கின்றன. ஐரோப்பிய மூலதனமே நம்தேசத்திலும் பலவான பலத்த உத்பத்தியில் பிரயோகிக்கப்படுகின்றது. ஆகவே இன்னும் கொஞ்சநாளில் ஐரோப்பிய தனோத்பத்தி ரீதிதான் எங்கேயும் பரவிவிடும். நமது வேளாண்மைகூட இம்மாதிரி மாறுவதற்கு ஆரம்பித்துவிட்டது.

## திருச்சிராப்பள்ளி ஜில்லா லால்குடி வித்தியாகாட்சி சாலை.

### ஆகஸ்டு, 1916.

நாளது வருஷம் ஆகஸ்டுமாதத்தில் லால்குடி ரேஞ்சு உபாத்திமைச் சங்கங்களின் சம்பந்தமாய் ஒரு வித்தியா காட்சிசாலை திறக்கப்பட்டு நடத்தப்படும். அதற்காக ஏற்பட்ட கமிட்டிக்கு ம-ா-ா-ஸ்ரீ திவான் பஹதூர் டி. தேசிகாசாரியர் அவர்கள் ப்ரெஸி டெண்டாயிருக்கும் பொறுப்பை வகித்திருக்கிறார். அக்காலத்தில் சென்னை கவர்னர் மந்திராலோசனை சபையின் மெம்பராகிய கனம் ஸ்ரீமான் சர். பி. எஸ். சிவசாமி அய்யர் B. A., B. L,. K. C. S. I., C. S. I. C. I. E. அவர்கள் ஷை காட்சிசாலையைத் திறக்கும் படிக்கு ஏற்பாடாகிறது. அநேக உடங்கியாசங்களும், பூதக்கண்ணாடி காட்சிகளும் நடைபெறும்.

இந்த காட்சிசாலை நன்று நிறைவேறும்பொருட்டு எல்லா கனவான்களுடைய உதவியும் வேண்டியிருக் கிறது. ஆகையால் கனவான்கள் அடியில கண்ட காட்சிப்பொருள்களை தங்களால் கூடிய அளவு 1916-ம் ஞூ ஜூலை மீ 25-உக்கு முந்தி அனுப்பும் படியாயும், மேல்கண்ட விசேஷத்துக்கு வந்து விஜயம் செய்யும்படியும் கேட்டுக்கொள்ளுகிறோம்.

### வேண்டி அழைக்கப்படும் சாமான்கள்.

I. வித்தியா பிரிவு:—

1. பிள்ளைகளின் கையெழுத்து.

2. உபாத்திமார்களாலும், மாணுக்கர்களாலும், வேலையில் தேர்ந்தவர்களாலும், காகிதத்தில் தயார் செய்யப்பட்ட பலவித சித்திரங்கள், பூகோள தேச படங்கள், பூகோள உருண்டைகள், பூகோள சம்பந்த மான படங்கள். தேசசரித்திர படங்கள், களிமண் உருவங்கள், காகிதமடிப்பு வேலைகள், காகித வெட்டு வேலைகள், மணி வேலைகள், பாசி வேலைகள், கூடை முடைதல் வேலைகள், பட்டாணி வேலைகள், குத்தித் தைத்த வேலைகள், சரிகை வேலைகள், சடை வேலை கள், நூல் வேலைகள், கம்பளி நூல் வேலைகள்.

3. போதனைக்கென்று உபாத்திமார்களால் செய் யப்பட்ட போதனு உபகரணங்கள். (ஒவ்வொரு உபகரணத்தையும் விவரித்து எழுதவேண்டும்).

4. உபாத்திமார்களாலும், மாணுக்கர்களாலும் இத ரர்களாலும் செய்யப்பட்ட கைத்தொழில் வேலைகள்.

5. உபாத்திமார்களாலும், மாணுக்கர்களாலும் இத ரர்களாலும் சேர்க்கப்பட்ட போஸ்டு ஸ்டாம்புகள், நாணயங்கள், பூச்சிகள், முதலியவைகள்.

6. கீர்த்திபெற்ற உபாத்திமார்கள், பண்டிதர்கள், அரசர்கள், மந்திரிகள் முதலிய பிரபல கனவான்க ளின் படங்கள்.

7. ஸ்கூல் கட்டடங்கள், வேலைச்சாலைகள், இயந் திரங்கள், காட்சிசாலைகளின் படங்கள். கிராமத்தி லும், நகரத்திலும் சுதேசிகள் வசிப்பதற்கேற்றத் தகு ந்த வீடுகளைப்போலும், கிராமத்திலும், நகரத்திலும் எலிமெண்டரி ஸ்கூல்களுக்குத் தகுதியான கட்டடங் களைப்போலும் பலகையாலும், அட்டையாலும் செய் யப்பட்ட மாதிரிகள் (models), பிளானும், எஸ்டிமே ட்டும் உடன் அனுப்புதல் வேண்டும்.

8. காட்சிசாலைக்கு சௌகரியமாய் அனுப்பக்கூடிய உள்ளூர் விளைபொருள்கள், அல்லது தாதுவர்க்கப் பொருள், அல்லது சுரங்கத்தில் உண்டாகும் உலோ கங்கள்.

9. காட்சிசாலைக்குச் சிறந்ததாகத் தோன்றும் வேறு சாமான்கள்.

II. விவசாயப் பிரிவு:—

1. உலகத்தாருக்கு அருமையாக உபயோகப்படுந் தன்மையால் பொது ஜனங்கள் அவசியமாய்ப் பார்க்க வேண்டிய விளைபொருள்கள்.

2. தற்கால நவீன முறைகளாலோ, விசேஷ பயிர் த்திறமையினாலோ உண்டாக்கப்பட்ட விளைபொருள் கள்.

3. புராதனமாய் வழங்கிவந்த விவசாயக் கருவிக ளைத் தோற்கடிக்கும் நவீன விவசாயக் கருவிகள், உப கரணங்கள், இயந்திரங்கள்.

III. கைத்தொழிற் பிரிவு:—

1. பொதுஜனங்களுக்கு விசேஷ உபயோகத்துக் குதவும் கைத்தொழிற் சாமான்கள், சுவர்க் கருப்புப் பலகைக்கும், மரக் கருப்புப் பலகைக்கும் பூசக்கூடிய மை செய்யும் விதம். செலவு சுருக்கமானதாயும், சிற ந்ததாயுமிருக்கவேண்டும். செங்கல், மரத்துண்டில் மைபூசி மாதிரி அனுப்பவேண்டும்.

2. விசேஷித்த வேலைத்திறமையையும், கைச் சாமர்த்தியத்தையும் காட்டக்கூடிய கைத்தொழில் வேலைகள்.

3. புராதனமாய் வழங்கிவரும் கைத்தொழிற் கருவிகளைத் தோற்கடிக்கும் நவீன கைத்தொழிற் கருவிகள், உபகரணங்கள், இயந்திரங்கள்.

4. தச்சு வேலே, தந்த வேலே, சலவைக்கல் வேலே, சண்ணும்புக்கட்டி வேலே, கல் வேலே, செப்பு பித்தளே முதலிய உலோகங்கள் வேலே, நெசவு வேலே, பாய் வேலே, வாழை நார் வேலே, அபிரக் வேலே, ஸ்கூல்களுக்குத் தகுந்த மரச்சாமான்கள்.

IV. சங்கீதப் பிரிவு:—சுதேச மேளம், நரம்புக் கருவிகள் (பிடில் வீணே முதலிய) இவைகளே உபயோகித்துக்காட்டல். இந்த வாத்தியக்காரர்கள் தாங்கள் செய்யும் கச்சேரிகளுக்குப் பணம் கேட்கக்கூடாது. நாங்கள் கச்சேரிகளுக்கு உத்தரவு கொடுக்கமாட்டோம்.

V. தேகப்பயிற்சிப் பிரிவு:—சுதேச கசரத்து. இதைச் செய்து காட்டுகிறவர்களும் தங்கள் ஆட்டங்களுக்குப் பணம் கேட்கக்கூடாது.

VI. வியாதிக்கிருமிப் பிரிவு:—வியாதிக்கிருமிகளின் படங்கள். தடுக்கக்கூடிய வியாதிகளால் பிடிக்கப்பட்டவர்களின் படங்கள் (நல்ல ஸ்திதியிலிருந்த போது பிடித்த படத்துடன் அனுப்பவேண்டும்).

VII. ஜீவவர்க்கப்பிரிவு:—செல்வப்பிராணிகள், பட்சிகள், இடைக்கக்கூடிய காட்டுமிருகங்கள், அனேக விதமான பட்சிகள், நாய்கள், குதிரைகள், எருதுகள், பசுக்கள். சப்கமிட்டியார் தேர்ந்தெடுத்து ஒப்புக்கொள்ளப்பட்டவைகளுக்கு மாத்திரந்தான் அனுமதி கொடுக்கப்படும்,

*N. B.*—பிராணிகளின் காட்சியும் பட்சிகளின் காட்சியும் முதல் நாள் மாலேயே முடிவு பெறும்.

VIII. தாவரவர்க்கப் பிரிவு:—அனேகவிதமான தாவரங்கள், பூக்கள், காய்கள், பழங்கள்.

முக்கிய குறிப்புகள்:—

1. காட்சிசாலேக்கு அனுப்பப்படும் எல்லா சாமான்களேயும் சொந்தக்காரர்களுடைய செலவில் தான் அனுப்பப்படும். ரெயில்வே கம்பேனியார் கொடுக்கக்கூடிய சாதகங்களேப்பற்றி அவர்களுக்கு எழுதப்பட்டிருக்கிறது.

2. ஒவ்வொரு சாமானேயும் அனுப்புகிறவர், சாமான் செய்தவர் அல்லது சொந்தக்காரருடைய பெயர், தொழில், வயது, சாமானின் விவரம் ஆகிய விஷயங்களே இங்கிலீஷிலும் தமிழிலும் குறித்து எழுதி யனுப்பவேண்டும். உபாத்திமார்களாலும், மாணுக்கர்களாலும், செய்யப்பட்ட சாமான்களாயிருந்தால், ஸ்கூல், ரேஞ்சு, வகுப்பின் பெயரையும் குறிக்க வேண்டும்.

முக்கியமாய்க் கவனிக்க.

3. மாணுக்கர்கள், உபாத்திமார்கள், இதரர்கள் செய்த சாமான்களில் மிகந் திறமையானவைகளுக்கு வேலேத்திறமைக்குத் தக்கபடி ஜட்ஜுகள் நிதானிக்கும் வண்ணம் பதக்கங்களும் (மெடல்கள்) சேர்டிபிகேட்டுகளும் கொடுக்கப்படும். எல்லாப் பிரிவுகளுக்கும் இப்பரிசுகள் உண்டு.

4. பதக்கங்களும், சேர்டிபிகேட்டுகளும் பெற வேண்டுமென்று அனுப்பப்படும் சாமான்களே அவ்வாறு குறித்து அனுப்பவேண்டும். அவைகளின் விவரத்தையும் பூர்த்தியாய் எழுதியனுப்பவேண்டும்.

5. விலேமதிப்புள்ளசாமான்களே சாமான்களின் சொந்தக்காரர்களாவது அவர்களுடைய ஏஜண்டுகளாவது பாதுகாத்துக்கொள்ளவேண்டும். கூடியமட்டும் சாமான்கள் களவுபோகாதபடிக்கு பந்தோபஸ்து செய்வோம். ஆனல் இந்த விதி காட்சிசாலேக்கென்று கடனுய் கமிட்டியார் பொறுப்பில் வாங்கும் சாமான்களுக்குப் பொருந்தாது. விசித்திர பிரசியாதியும் வேலேப்பாடுமுள்ள சாமான்கள் யாரிடத்திலேயாகிலுமிருந்தால் அவைகளே "கடன் சாமான்களாக" கமிட்டியார் அங்கீகரித்துத் திருப்புவார்கள்.

6. 1916-ளு ஜூலை-மீ 25-உக்குள் இன்ன சாமான்கள் அனுப்பப்போகிறேம் என்று தெரிவிக்கும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறது. சாமான்களுக்காக ஸ்பெஷலாய் இடம் வேண்டுபவர்கள் உடனே எழுதிக்கொள்ளவேண்டும்.

7. II, VIII. இப்பிரிவுகளில் அழுகக்கூடிய சாமான்கள்மட்டும் காட்சிசாலேமுன் தினம் மாலே 6 மணி வரைக்கும் ஏற்றுக்கொள்ளப்படும்.

பொதுஜன நன்மையைக் கருதி மேல்கண்ட விஷயங்களேப்பற்றி சிரத்தை எடுப்பீர்களென்று நம்புவதுடன் எங்கள் வந்தனத்தையும் செலுத்துகிறேம்.

இப்படிக்கு,

1. ப. பார்த்தசாரதி நாயக்கர், B. A., L. T.,
லால்குடி ரேஞ்சு உபாத்திமைச் சங்கங்களின்
அக்கிராசனுதிபதியும்,
லால்குடி ரேஞ்சு ஸ்கூல் சப் அசிஸ்டண்டு
இன்ஸ்பெக்டரும்.

2. L. S. நடராஜ சர்மா, B.A, L. T.,
காட்சிசாலே கமிட்டியின் காரியதரிசியும்,
லால்குடி போர்டு செக்கண்டரி ஸ்கூலின் ஹெட்
மாஸ்டரும்.

*N. B*—கடிதங்கள் எழுதுவோர் முதல் கையொப்பமிட்டிருக்கிறவருக்கு எழுதவும்.

வர்த்தகர்கள் கொண்டுவரும் சாமான்களே ஜட்ஜுகள் பார்வையிட்ட பின்பு சரியான விலேக்கு விற்கலாம். ஜூலைமீ 15உக்குள் தெரிவித்து உத்தரவு பெறவேண்டும். ஒன்றுக்கு அதிக சாமான்கள் ஒரே விதத்தில் இருந்தாலொழிய காட்சிசாலே முடிந்தபின்புதான் விலேக்கு வாங்கின சாமான்களே அப்புறப்படுத்தலாம். லால்குடி திருச்சிராப்பள்ளி கோட்டை ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 12 மயில் தூரமுள்ளது.

## ON ENVY.

## பொருமை.

பிறர் சம்பத்தைக்கண்டு துக்கப்படுகிறவனும் பிறர் சந்தோஷப்பட்டால் தான் விசனப்பட்டு அவர் விசனப்பட்டால் தான் சந்தோஷப்படுகிறவனும் தன் துர்ப்பாக்கியத்துக்குத் தானே காரணமாகின்றான். இது அவன் விதி:

எப்படி ஒரு புதர் தீயினால் பற்றியெரிகின்றதோ அப்படியே பொருமைக்காரன் மனசும் எரிந்துகொண்டேயிருக்கும். அவன் மனசு ஒருநாளும் சந்தோஷ மாகவாவது சமாதான மாகவாவது இராது. இத்துர்க்குணம் சாதாரணமாய் மனிதனுக்கு சுபாவம். ஆனால் இதை முளையிலேயே அறிவு என்கிற கோடரியினால் நாசஞ்செய்து மேல் விருத்தியாகாமல் தடுக்கும்பட்சத்தில் நாம் விசனமென்கிறதையே அறியோம். சந்தோஷம் தனக்குத்தானே வரும். இதற்குத் திருஷ்டாந்தம்:—ஒருவன் தன்னயலான் பாக்கியத்தைக்கண்டு சகிக்கமாட்டாமல் ஓர் அரண்ணியத்தில் வசிப்போமென்று போனான். ஒரு மகாரிஷி இந்தப் பொருமைக்காரனைக்கண்டு பச்சாதாபப்பட்டு ஒரு மந்திரசக்தியுடைய பாச்சிகை யவனுக்குக் கொடுத்தார். அதன் மகத்துவம் யாதெனில் அதை மூன்றுதடவை என்னென்ன கோரிக்கொண்டு போடுகிறானோ அதுகள் சம்பவிக்கும். ரிஷி "மூன்றுதடவையும் நீ இச்சிக்கிறது கிடைக்கும், ஆனால் உன்னயலானுக்கு உன்னைவிட இரண்டு மடங்குகிடைக்கும்" என்று சொன்னார். அவன் வீட்டுக்குப்போனதும் தான் பாச்சிகையை யுருட்டுவதில் அயல் வீட்டுக்காரனுக் குண்டாகப்போகிற பாக்கியத்தை மறந்தவனாய் எனக்கு வீடுகளும், தானியமும், வெள்ளி, தங்கம், நகைகளும் விஸ்தாரமாய்க் கிடைக்கட்டும் என்று சொல்லி பாச்சிகையை முதல்தாம் உருட்டினான். அப்படியே கிடைத்தது. அண்டை வீட்டுக்காரனுக்கு அதனினு மிருமடங்கு கிடைத்தது. உடனே ஞாபகம்வந்து அயலானுக்குத் தீங்கு நினைத்தவனாய் எனக்கு ஒருகண் குருடாகட்டும் என்றுசொல்லி இரண்டாந்தடவை உருட்டினான் உடனே அடுத்த வீட்டானுக்கு இரண்டு கண்களும் போய்விட்டன. என் வீட்டிற் பாதி பூமிக்குள்ளமுழ்ந்திப் போகட்டுமென்றுச் சரித்து மூன்றாந்தரம் பாச்சிகையை யுருட்டினான் பக்கத்து வீட்டுக்காரன் வீடு பூர்த்தியாக முழுகிப்போய்விட்டது. இப்படியாகவே இவன் தனிமையாக விருக்கக்கண்டு இவன் வேலைக்காரர்களெல்லாரும் ஒருங்குசேர்ந்து நன்றாய்ப்புடைத்துவிட்டு ஆஸ்தியாவற்றையுமெடுத்துக் கொண்டு ஒரு படவிலேறி யோடிவிட்டார்கள். அப்போழ்தவன் 'ஐயோ என் பொருமையினாலல்லவா இப்படி நேரிட்டது. இந்த துர்க்குணத்தினால் நான் அயல் வீட்டார்களைக் கெடுக்காமலிருக்கும் பட்சத்தில் ஒத்தாசையே செய்திருப்பார்களே. ஒத்தாசையே செய்யாவிடினும் அவர்களிருக்கிறார்களென்கிற பயத்தினால் மற்றவர்கள் என்னை இப்படி இம்சிக்கத் துணியார்களல்லவா" என்று கூக்குரலிட்டுக் கதறினான். ஆனாலவனைக் காது கொடுத்துக் கேட்பார் யாருமில்லை.

---

## THE VIVEKACHINTAMANI.

This magazine is devoted to the diffusion of knowledge and to the "Children's movement." The commendable zeal of the Editor, Mr. C. V. Swaminathan, in promoting the cause of children's education, and in making them to realise their duties, rights and responsibilities, has earned for him an enviable name. The first few pages are devoted to the utterances of Lord Hardinge and his parting message to the students, when the honour of LL. D. was conferred upon him by the Bombay University, This is followed by a dedicatory epistle addressed toSir Sankaran Nair, the first Indian Member in charge ot Education. The Editor advocates the necessity of encouraging the study of vernaculars, on the strength of the pronouncements of Lord Hardinge as the Head of the State, and Sir Rabindranath Tagore, the "Poet-Laureate of Asia," as representing the ancient wisdom of India, "raising their voice against the vehicle of education being in a foreign language, to the detriment and neglect of the vernaculars of the country." The stray thoughts of a youthful ascetic, who gave up his all to attain emancipation from bondage, are also embodied in a chapter under various heads, *i.e.*, bravery, time, self-exertion, etc.

THE NEW INDIA *dated* 21st *June*, 1916.